* என்றவம் முறைமை யாலே யிசைந்தவுற் பவசசார வாகித்
துன்றிடு முறையிலே வந்து சொன்னவத் தானத் தேயு
மன்றிய சார்வுங் கெட்டங் காயசந் ததியு மாயச்
சென்றநற் சார்வு செபயிற் றேசபார மங்க மெட்டே. 12

* தேசபார மொழுக்கந் தானந் துறவன்பு முயற்சி ஞானம், மசையாமை பொறையுர வாய்மை யறநெறி நிற்ற லங்க, மிமை யாதற் காட்சி † யூக்க மெய்செய்கை முயற்சி வாழ்க்கை, யசை யாநற் கடைப்பா டான்றோர் தலைப்பாடன் முந்தி பொன்றல். 13

† யூக்கஞ் செயல்செய்கை என்றும் பாடமுண்டு.

* போதமாங் கந்த மைந்திற் போதமும் பங்க மாகும்
பேதைமை யாதிச் சார்வாற் பிறந்துபின் பனிந்த பாடு
மாதிநற் கன்ம நோன்புண் டாகாப் பீச னுண்மை
சாதமே யில்லை யென்று சாற்றுநற் சுகத நன்னூல். 14

மெய்ஞ்ஞான விளக்கம்.

அரியநற் புத்த நான்கு மதமுள வவற்றுட் பேத
முரியவே ருலக மூலத் துரைப்பது வன்றி வேறு
பெரியநல் வான மீசன பேறுறு மான்மா வின்றிய
பொருவிலா வீடு கொள்ளும் பொருண்மையும் புகலி னன்றே. 15

பிரபோதாத்திருகாம்.

ஆனபொரு ளித்தனையு மனித்த மென்றே மறிவானே யுளனென்கை யசத்திய மென்றே, ஞானமுள தது நான்கா நடக்கு மென்றே நடக்குமவை † சேராகை நலவீ டென்றே, மூனமிலாப பொருளாகி யுலவா தாகி யுள்ளதுநி வாணமெனு மொன்றே யென்றே, மீனமிகு முடம்பான வருவ மெட்டு னியைபாக விலை யினைக்கு மிசைப்பென் றேமே. 16

† சேராக என்றும் பாடமுண்டு

(நிராகரணம்).

சித்தாந்த தீபிகை.

உறைவாய சகமீச னுயிர்பிறப்பு வீடென்னு
மறைவாய பொருளுணர்த்தும வாய்மையதா முபதேச
முறைவாய பொருளில்லை வாயிலுடம் புணர்வென்னு
மறைபாத பொருளுரைத்தன் மறைபயிலா வுரையென்றும். 17

கந்தத்திற் போத மாமேற் கந்தமோ போதந் தானே
முந்திற்றே துரைத்தி டாயான் முற்பிற்பா டிருக்கு மாறு
சந்தித்துக் கந்த மைந்துஞ் சடங்கண்முன் பிறக்கக் கூடா
சிந்திக்கும் போதங் கந்தஞ் செனியாமை யில்லை யன்றே. 18

பேத்தமா முடலி னன்றிப் பிறந்திடா துயிர தென்று
மொத்துள வுயிரை யன்றி யுடலமுண் டாகக் கூடா
வித்துடன் மரமும் போல மேவியே வருமா மாகி
னித்தமா மனித்த மென்று நிகழ்த்திடக் கடவ தன்றே. 19

தோன்றுநீர் வரவே போலத் தொடர்ந்துணர் வழிந்து தோன்றி
ஞன்றநீ ரிட்ட தெல்லா மத்துடன் கழிதல் போல
† மேன்றுணர் பொருடஞ் சீலம் பாவனை வினைக ளெல்லாங்
கான்றுணர் வதனோ ‡ டேகிக் கழிந்திடுங் கருத்து ளையா. 20

† மேன்றுணர் பேதஞ் சீலம் என்றும் ‡ டோக்கக் என்றும் பாட
முண்டு

மெயம்மொழி.

† சனித்திடாச சிருட்டி முன்னுட் சாபவித் திடாது நிற்க
வனித்தமாம் போத மென்னி னம்மையிற் செய்த வூழைச
சனித்தனு பவிப்பார் செய்வார் தாமன்றேற் செய்யக் கூடா
வனித்தமா மென்ற தென்னோ வம்மையோ டிம்மை கண்டாய். 21

† சனித்திடச் எனறும் பாடமுண்டு.

தீபத்திற் றீபம் போலச செனிக்குமவ் வழியிற் போதந
தீபத்திற் றிரியு நெய்யுஞ் செனித்ததன் பின்செல் லாது
தீபத்தைப் பேதிப் பாருஞ் செய்விக்கும் வினையும் வேண்டுந்
தீபத்தை யேது சொல்ல றிட்டாந்த விரோத மாமே. 22

இட்டவித் திறந்து வித்தவ் வழியெதிர் வருமா றேபோற
கெட்டுமவ் வழியிற் றோன்றிக் கீழ்வினை புசிக்கு மென்னி
னிட்டவித் திறந்து சித்தங் கிடையரு தெழில்வித் துண்டாங்
கெட்டது முருவ மங்ஙன் கேடிலை யறிவுக் கன்றே. 23

அஞ்ஞானநிவிர்த்தி.

கண்டபொருள் கணிகமெனிற் கணிகந தன்னைக் காண்பாரார் காண்பவருங் கணிக மாகி, னுண்டபொரு டனைநினைந்து பினையுண் பாரா ருண்பவரு முண்பனவுங் கணிக மாகிற், கண்டவரை யொருகாலம் பின்பு கண்டாற் கழறுவர்க ளவனிவனையென்று கொண்டு, பண்டையவ னிப்பொழுது மல்லவாகிற் பராமரிசந் தனைபெங்ஙன் பணிக்கு மாறே. 24

சித்தாந்ததீபிகை.

வெங்கனற் சுடர்போற் புத்தி மென்மேலு மெழுந்து தோன்றிப்
பங்கமாங் கணத்தி னென்னிற் பண்டை † யுணர்வு கூடா
பொங்குமவ் வனல்போல் புத்திக் காதார பூத ஞகி
யங்கவை புணர்தற் கேது வான்மாவென் றறிந்து கொண்ணீ. 25

† துணைக் என்றும் பாடமுண்டு.

விரிந்தவெங் கதிரோன் முன்பு விளங்குகண் சேட்டை யாங்குத்
தெரிந்தசே தனன்றன் முன்னே செடபுத்தி சேட்டை பெற்றுப்
பரிந்துறும் விடயந் தோறும் பங்கமா யணித்த மாகும்
புரிந்தனை யுயிர தென்றே புமான்றனை யறியா தையா. 26

படைத்தளித் தழிப்ப தென்றும் பாவபுண் ணியங்க ளின்றிப்
படைத்தளித் தழிப்பா ரில்லை யென்றனை பகரக் கேளாய்
படைத்தவிப் புவன மான்மாப் பலதனு கரண போகம்
படைக்குமா றென்ச டந்தான் பாவபுண் ணியங்கள் சொல்லாய். 27

சோறிட்டுண் டாலொ ருத்தர் சொல்லாமற் பசிபோ காதோ
வேறிட்ட கல்லைப் பின்பங் கிழிபிட வொருவர் வேண்டா
சீறிட்டே சர்ப்பந் தீண்டச் சிலர்துன்பங் கொடுக்க வேண்டா
மாறித்தம் வினைபு சிக்க மற்றொரு கர்த்தா வென்னே. 28

அக்கணம் புசிக்கை யாலே யவைதமக் காரும் வேண்டா
வக்கணம் புசிக்கி னூழு மவைநல்ல வேது வாகு
மக்கணம் புசியாச் சென்ம மனேககா லங்கள் போயு
மொக்கனும் புசிக்கை யாலே யிவைபுசிப் பிப்பார் வேண்டும். 29

பிரபோதனம்.

எப்பொருளு மநித்தியமெனி னிலங்கியநீர் வாணமெனு
மப்பொருளு மநித்தியமா நித்தியநீ யதற்கிசைந்தாய். 30

ஊன்புக்க வுணர்வொழிய வுணர்வுடையோர் நாத்திியெனின்
யான்றுக்கி யான்சுகியென் றிருத்தனேர் விருத்தமன்றோ. 31

விஞ்ஞானமுஞ் சம்ஸ்காரமும் வேதனையுஞ் சம்ஞையுமா
மிஞ்ஞான பின்னபோக மேகநிண்ணயம் பணுமாறேன். 32

சித்தத்தின் கணிகசந்ததி கீர்கைநாசனே மோட்சமெனிற்
சித்திப்பது பரணமானபின் சித்தியெனடத சேவையென்றுன். 33

நிர்விகற்பமென் றொருபதார்த்த நித்தியமென்று நிர்ணயிக்கிற்
சாவார்த்தமுங் கணிகமெனுமுன் சத்தியவாக்கியமு மசத்திய
[மாம்.
பூதங்களைப் பொருந்துவித்துப் புண்ணியபாவமே தேகப்பண்
[ணிற்
பூதங்களாய விசித்ரமான பித்திசித்திரமுங் கன்மசித்திரமாம்.

கூடாத தர்ப்புத்தி யிப்படியா னீணிலத்தி
லாடாத படிசொல்லி யறிவழிந்தா யாறேயே. 36

சித்தாந்ததீபிகை.

சார்பினிற் பிறப்ப தாகுந் தசபார மங்க மெட்டாற்
சாபாற வீடே யென்று சாற்றினை சளமோ ராதே
யாருநல் லான்மா வில்லை யார்மேலை சார்புந் தீர்வு
போர்வறிற் பித்தர் வார்த்தை போலுமுன் னுரைய தையா.

சமயாசாரம்.

இறந்தோர் பிறவா ரென்றுரைத்து மேகமுலகத் திலதென்றும், பிறந்தோ னுடம்போ டணர்வென்றும் பிறந்தா னொருவ னிலனென்றுந், துறந்தோன் வீட்டி னிலனென்று முணர்வா தாரந் தொக்குடம்பென், றறைந்தோன் புத்த னுதலா னுலோகாயத னோ டறிவொன்றார். 38

சேத்தவர் பிறப்ப தில்லை சீவனு மான்மா வில்லை
முத்தியெப் புலமைதான் றில்லை முயங்குமா காச மில்லை
பித்தரை யீர னில்லை நீயைந்துதாம் வணங்குகின்ற
புத்தனு மில்லை யென்றாய் பொருளறி விலாமை யாலே. 39

அனந்தபோதம்.

புத்தியதன் சந்ததிதான் பொன்றக் கேட்டாற் பொருந்தியநல் வீடென்றாய் புத்தி யன்றி, முத்திபெற வொருவரிலைப் புத்தி பொன்று மானக்கான் முத்தியெனு மொழிதா னார்க்குச், சத்தமது கலகமெனத் தர்க்கங் கற்றுத் தலைகெட்ட நூலோதித் தாக்கிட் டாடும், புத்தியிலா தவர்கட்குப் புகலே தென்னிற் பொருவருநற் சவுகதமே யன்றி யுண்டோ. 40

உள்ளதும் புத்தி யாகி லுரைத்ததும் பங்க மாகிற்
றெள்ளுநன் முத்தி சேர சேதன னில்லை யாகி
லள்ளலால் பிடக மோதி யவியச்சீ வரமும் போர்த்துப்
பொள்ளல்வாய்ப் புத்த னேநீ பெற்றதென் புகன்றி டாயே.

ராசனை யில்லை யென்று மிங்குநீ கோயில் வைத்துப்
பூசனை செய்வ தாகவும் † புத்தரர்ச் சனைக ளென்று
பாசினை யறவு மையப் தொன்றுசெய் வதுவோ னொன்று
நேரனு மிதுவோ முன்பின மலைவிலா நிலைமை யுந்தான். 42

† புத்தரர்ச்சனையேயென்றோ, வாசினை என்னும் பாடமுண்டு.

நித்தனென் பதனைவிட்டு நிரகுண னென்கை விட்டுப்
புத்தனை யகண்ட மெங்கும பூரண னென்கை விட்டு
மத்திய னதநிற் குளமேள மனநதிரி யாத கஞ்சி
பத்திநிலை புத்தி பண்ணீ ரதுவலா லறிவொன் றில்லீர். 43

சமயாசாரம்.

மாயன் புத்த வேடமாய் மயக்கத தெய்வங் கைவிட்டு
மேய வசுர ரதினமூவா விடாது மேனமை பெற்றமையான்
பாய்வி றெய்வ † மிலதென்னு மயக்கந் தன்னுன் மயக்குண்டோர்க்
கேயு முத்தி யிலதாகு மீச னுளனென் றேததாமை. 44

† மிலதெனனும் புத்தன் பஞ்சி என்னும் பாடமுண்டு.

புத்தம் முற்றிற்று.

ஆகச்செய்யுள் 500



## 2. அருகதம்.



வினாவியாக்கம்

முத்தியைப் பெறுமா னமவு முழுதரு ளிறையு மில்லைப்
புத்தியுங் கணிக மேனப புகல்வினை பண்ணு மென்ன
மத்துறு புத்தந் தன்னின் வகையெலா மருளி னற்போ
லத்தனே யருகன் றன்மை யதனையு மருள வேண்டும். 1

அனந்தபோதம்.

தானம்விட் டறஞ்செய்வார் தவத்தைவிட்ட தன்மையார்
மானம்விட்ட † மண்டிரிந்து வற்கமற்ற சங்கையார்
ஞானம்விட்ட வாய்மையார்க ணன்மைவிட்ட தீமையா
ரூனம்விட்ட பானை யென்ன வுண்டுபட்ட பண்டியார். 2

† மண்டிருந்து என்றும் பாடமுண்டு.

சேறிந்திருட் குழாமெனத் திரண்டு நண்ட மேனியா
ரறிந்துபா தகஞ்செய்வா ரறங்கொடே மறஞ்செய்வார்
பிறிந்தபீலி யோடுபாய் பிடித்திடுக்கும் பெற்றியார்
குறைந்தவள்ளி யின்கிழங்கு கொண்ட † கோச மேனியார். 3

† தன்ன என்றும் பாடமுண்டு.

பேய்படிந்த மேனியார் பிணம்படிந்த வாயினார்
நோய்படிந்த வுள்ளமென்ன நொந்துநைந்து வாடுவார்
வாய் ‡ மலிந்த நாவினார் வழக்கிழந்த செய்கையார்
தூய்மையின்றி மாசுதுன்று துட்டதுன் மனத்தினார். 4

‡ படிந்த என்றும் பாடமுண்டு.

சிந்தாநந்த தீபிகை.

வேடசார மியபிரகார மேவமண்ணை மூடர்தங்
கூடஞான மோதுவார்தங் கொள்கையாவு மோதுவன்
பாடுவேத வாகமப பரப்பெலாந் தெரிந்துமெய்
த்தேடிநாட வென்றுவந்த தீரதீர கேளிரே. 5

அநந்தபோதம்.

மடவாரையு மில்லான்மக வில்லான்மனை யில்லா
னுடையானது மில்லானுற வில்லானுட னில்லான்
றிடமாகிய விரதச்செய லுடையான்செறி வினையா
னடமாடலு மில்லானமக் கிறையாகிய நாதன். 6

பகையாகவு நினையான்படை பிடியான்கொலை புரியான்
புகையாதெழு தழலாகிய பொறிவாயில்க ளைந்து
மிகையாவகை யவைமாய்தரும் விரதாதிக ளுடையா
னகையாகவு மிகையானசை வசையாகவு நண்ணான். 7

திரிபுரஞ் சுடுதல் செய்யான் செய்தவேள் வியினைச் சிந்தான்
வரியர வல்குலாளை வடிவினில் வைத்துக் கொள்ளான்
வெருவர வலங்கைச சுட்டு வெண்பொடி மெய்யிற் பூசா
னிருவினை கடிந்து வாய்மை யெய்துவ னெங்கள் பெம்மான்.

தேவியைப் பிரிந்து தேடித் திசைத்தலம் வருவா னல்ல
னாவியே யமுதே யென்றன் றமர்களைத் தழுவா னல்லன்
மேவிய † பிறவித் தாயான் மேவுகா னடைவா னல்லன்
றூவியீ ருலகங் கொள்ளா னருமநா யகனெங் கோமான். 9

† பிறவிப்பதகான் மடிப்படுகானுமல்லன் என்றும் பாடமுண்டு.

* பசிதாகம் பயம்வெ றுப்புச் சிந்தனை யிராக மோகங்
கசிவாய வேர்வு கேதம் மதம்பிணி மூப்புக் கேடு
நசையாரும் வியப்பு றக்க † நனவொடு களிப்பி கழ்ச்சி
யசைவாய மலம்விட் டான்மா வனையுமெண் குணமுங் கேளாய்.

† நகலொடு அல்லது பிறப்பொடு என்றும் பாடமுண்டு.

* அனந்த ஞானம் மனந்த தரிசன மனந்த வீர்ய
மனந்தநற் சுகநிர் நாமங் கோத்திர நிராயுஷ் யந்தா
னனந்தமில் சம்யதா பாவ மாவவென் றெண்கு ணங்கள்
புனைந்துநல் லருகர் தம்பாற் பொன்னெயில் வட்டத் துய்ப்பர். 18

ஞானவினோதம்.

* பொன்னெயிலாம் வட்டத்துட் போய்பபுக்கங் கருகருடன்
றன்மையுடை விதராகந் தளர்வின்றித் தாம்பெற்றுத்
தொன்மையுடை யதுதானுந் துகளறவே தான்வெடித்துப்
புன்மையறப் போவதுவே பொருவருகன் புகன்முத்தி. 19

அருகர் சாத்திரம்.

வினையற விட்ட போதின் வெடித்தம்ப ரண்டம் போல
நினைவருங் குணங்க ளெட்டு நிறைந்துமே னோக்கி யோடி
முனிவரு முலக மூன்று மிறைஞ்சமே லுலகி னுச்சிக்
கனைகழ லரச நிற்றல் கைவல்ய மாகுங் கண்டாய். 20

அளந்தபோதம்.

இரவினி † லுணவு மூனு மெண்ணெயு மேமழை மார்பால்
விரவலுங் குளியும் பூவும் வெற்றிலை பாக்கு மின்றி
மருவலி லெங்க ணீதி வழிபட மதியொன் றுண்டேற்
பரகதி கண்டு மீண்டிப பரமன துலகஞ் சார்வார். 21

† லுணர்வு மூனு என்றும் பாடமுண்டு.

கொன்றல் வெட்டல் குறைத்தல் கூப்பிடல் கோழி கூகைக
ளுய்களுந், தின்றல் சாறென றிய சொற்கள் புலாலி றைச்சிகள்
செப்புத,லென்ற சொற்க ளனந்த முஞ்செவி யெய்திடிற்சரி தைத்
திற, மன்று முட்டென வோதுமுக்குடை யாதி நாதர்தம் மாகமம்.

அடுப்புலக்கை யுரற்கள்சால்சுள கம்மிகட்டி லளிக்குல, மட
க்கைபானைகள் வாருகோலொடு தோலுகிர்மயிர் மண்ணிமடைப்,
படுக்கைபாய்பரி நாய்கள்பூனைகள் பன்றியாடுகள் பாதக, முடிக்
கும்வேதியர் முண்டரீற்றரு முட்டின்முட்டு மொழிந்ததே. 23

(நிராகரணம்).

மெய்ம்மொழி.

மெய்யுள வளவு மான்மா வியாபியா யிருக்கு மாகிற்
கையொடு காலும் வாங்கக் கழிந்திடு மவற்றுட் சீவன்
மையவே யறிவு வேட்கை பண்டுபோ லுண்டு மாகா
வையவித் தட்டு மன்றி யவத்தைக டாமுங் கூடா. 24

அணுப்புரைக் கண்ணு மூன்றங் கடைந்ததிற் பற்று மாங்கே
யணுக்களாய்த் திரிந்த வூழ்க ளவ்வவர் தம்மைப் பற்றி
லணுக்களேழ் சடமா மந்தா லறிந்துசெய் தாரைப் பற்றா
வணுக்களேழ் செய்யா † தாரு மணைந்திடிற் பாவ மென்னாய். 25

† தாரு மணைந்திடிற் பற்று மென்றாய் என்றும் பாடமுண்டு.

உருவனு வாகி யவ்வூ ழுழலின்மண் ணைபூத லத்து
ளொருவுயிர் புகவே வண்டுங்கா லதனுடன் புகலுங் கூடா
விருவினைப் பிறப்புக் கேது வென்றுமீன் டிவற்றி னொன்று
தருநல முத்தி யென்று சாற்றுதல் சழக்க தன்றே. 26

அடர்த்திரு வினைகொ டுப்ப தருந்துயர்ப் பிறப்பை யன்றி
யிடத்தினை யுடைய வின்ப வீட்டினை யளிக்க மாட்டா
விடத்தினைக் காலு நாக மிக்கமிர் தளிக்க வற்றோ
வெடுத்துற வெற்றுஞ் சூல மெட்டிசந் தனமு மன்றே. 27

நித்தியானந்தசரிதை.

இருவினையும் பிறப்பென்பா யொருவினைக்கு நீரிசைதி
யொருவினைதா னுண்டாமே லுடனுண்டா முடனுண்டே
லிருவினையு முண்டாகு ‡ மெங்ஙனே பிறப்பறுப்பா
யருவினையிற் பட்டழுந்த வழகியநூல் கண்டாயால். 28

‡ மெங்ஙனீ என்றும் பாடமுண்டு.

குறுந்திரட்டு.

வெய்யோன் மதிசென் றறிந்தாலும் வியாபி யல்ல வுயிரென்றான்
கையைக் காலைக் குறைத்தாலுயிர் சிறிதுங் கழியா வகைகண்டு
மெய்யி னளவே யுயிரென்றான் வினைக ளிரண்டும் பிறப்பேயென்
றையோ மீண்டிங் கதிலொன்றான் முத்தி யென்றா னுமருகன். 202

வகை யென்றான் பலவென்றா னில்லை யென்றா னுளதென்றா
னொரு சித்த மென்று மைந்தா னதனை யநித்த மாமென்றான்
மோகம் போல வருவாகு மென்றான் மறித்து முருவென்றான்
யோக மில்லா வார்த்தைகளை யுரைத்தா னிவ்வா றியமனென். 203

கண்ணிமைக்கி னுடறுடிக்கிற் கைமறித்துக் கால்பெயர்த்து
மண்மிதிக்கி னெண்ணிறந்த பிராணிபடு மெனவகுத்தாய்
கண்ணிமைப்பை யுடறுடிப்பை கைமறிப்பை கால்பெயர்த்து
மண்மிதிப்பை நீகண்ட னாமேலாடு மலைதியால். 29

### சமயாசாரம்.

புன்புலான் மறுத்தோ மென்பர் போசனம் புசியாக் காலைத்
தன்புலா லுடலைத் தின்னத் தாமுட றளர்ந்தோரார்
வன்புலா றயிர்நெய் பாலு மனப்புலான் மறுக்க மாட்டார்
துன்புலா விருந்து மெய்யூன் றுறந்தன ரென்றல் பொய்யாம். 30

### அநந்தபோதம்

ஒன்று கோடி நா ளுகி யுதித்திடுங்
கொன்று தின்ற மரத்துயர் கூறிடி
னன்று தீதென் றிடாதெனி னல்லராய்ச்
சென்று தீதின்மை யாரையுந் தின்மினே. 31

### நித்தியானந்தசரிதை

உனக்கென வாக்க லாலே யூண்பொரு ணிமித்த மாக
மனத்தினிற் கவலை யோடு மரிப்பன வனேகஞ் செந்து
சினத்தொடு கிருமி † கீடஞ் செத்திட மருந்து தின்மை
யனத்தமி லறநன் றந்த வறஞ்சொன்ன வவரைக் கூறாய். 32

† கீரை யென்றும் பாடமுண்டு.

### சமயாசாரம்.

ஆர்த்தநிக் கிரகத் தோடே யனுக்கிர கமுமில் லென்று
யார்த்தரை யறிய வுங்கட் காகமஞ் சொன்னா ரார்தா
‡ னார்த்தரென் றருளா லோதா னன்றிநிக் கிரகத் தாலோ
வார்த்தர்தா மன்றா மாகி லாகமம் பொருளன் றையா. 33

‡ னார்த்தரே யருளா லோதா என்றும் பாடமுண்டு.

சகலாத்தர் தம்பாற் சென்று தன்மமே யோனி யாக
விகலாத்தர் கதம்ப கென்ன விகாரமின் முரசே போலச்
சகலாத்த மடக்கிக் கொண்டு பஞ்சராத்தி காய மென்றா
விகலாத்தர் விரித்துச் சொல்லை விளம்பினா ராக மங்கள். 34

கதம்பக வென்றா லதுவுங் கதம்பக வெம்ப தன்றே
விதந்தெசய வுயிர்கட் காத்த தியாவையு முணர்ந்து பார்த்து
விதம்பல பொருளோர் சொல்லால் விளம்பிடக் கூடா தாகு
மதன்குறை யோரீர் முத்த ரானவர்க் குண்டோ சிந்தை. 35

## மெய்ம்மொழி.

சிந்தனை யில்லா வாத்தர் திறத்துறு பறையிற் போல
வந்தவவ் வொலிக ளியாவு மதித்தனர் விகல மென்னிற்
சிந்தனை யில்லாச் சத்தம் பொருட்செறி வின்மை யாலே
முந்தையி லிருவ ருக்கு முழுதுணர் வில்லை யாகும். 36

சிந்தையி லேக தேசஞ் சேர்விடு † முதலோகாந் தந்தான்
சிந்தையி லேக தேசந் தெரிவிக்கு மாறு றெல்லாஞ்
சிந்தையி னிரவி போலச் செறிகதி ரவற்குண் டெய்குஞ்
சிந்தையி லாத்தர் காங்கே தெளிவுறி விபாய மென்றாய். 37

† முதலோ காந்தஞ் என்றும பாடமுண்டு.

அடுத்தது காட்டு கின்ற வரும்பளிங் கதுபோ லென்னி
லடுத்திடா தவற்றைக் காட்ட மாட்டாதே யாத்தர் பின்னை
யடுத்ததே சகத்தி யாவு மக்கிரத் திருக்க வென்னி
னடுத்தெலா மொன்றாய்த் தோன்றுமதுவிதென் றறிவொண்ணாதாண்.

பொறியுறு சரீரி யாகிற் புவனுந்தந் திருபப ராகிற்
செறிவுறு சிறைவி லாகிற் செய்தன வறிபா ராகி
‡ னறைவுறு விரதி யாகி னவர்தம்மாற் பெற்ற தென்னி
னெறியுறு மவர்கட் காத்தர் நிறல்போது மென்னிற் கேளாய். 39

‡ னறிவரு ளில்லே யாகி என்றும் பாடமுண்டு.

ஓர்ந்துரை நிறுவிற் புக்கா லல்லது கிலேசந் தீரா
சார்ந்தவர் சரீரி யாத்தர் தம்முன்னும் புகக்கூடாது
சேர்ந்தவச் சமீபத் தாலே தீராது துக்க மையா
வார்ந்தநல் லறிவை விட்டுன் னறிபவி டதனைக் கூறாய். 40

எட்டெனுங் கருமந் தானு மீரொன்பான் மலமு மிங்கே
கெட்டொழி றனின்வி டென்றாய் கிறிபடத் தலைப றித்து
முட்டவை யுருமற் காத்து முன்புள மலநீங் காதாற்
மட்டிலே யருக னேயுன் றலைமயிர் பறித்து விடே. 41

## நாஸவிஜேதம்

வானல்லா மாபூத சதுட்டயத்தின் விகாரமெலா
மூனல்லாக் கரணங்க ளுடனிகழ்ச்சி யோயுளதங்
கூனல்லா வொன்பாவெ ளுரைபபதுவுந் தானில்லைத்
தானல்லா புத்திரரு தாய்தங்கை புணர்ச்சியதால். 2

## அஞ்ஞானநிவிர்த்தி.

அறிவுடைய வூனதுவே யான்மா வன்றி யகத்தாதல் புறத்தாத லறியி னுண்டோ, பிறிவுடைய கரணங்க ளாதல் பேசிற் பெயர்த்துமனை மேபாதல் பிறிதொன் றுண்டோ, முறையொழிய பொய்குழலா மணமே முத்தி முகரியசந் தனமலரே சுவர்க்க மாகும், பிறிவிலைநு வைவாக மெனவும பேசி பின்பிணியொன் றில்லையெனப பிறப்பித் தானே. 3

## மெய்ம்மொழி.

சைதன்ய பிரகுன்மாச சார்வினை மறுபிறபபூழ், பொய்யதா ளவை யொன்றே பூதங்கள் புணர்பசி காலஞ், செய்தவவ் வியல்பா மெல்லாஞ் செனிததவா றடங்கு முத்தி, மைதுன முதலேலா மாய்தல் வடிக்கநற் பொருளி தன்றே. 4

## பிரபோதனம்.

மட்டவிழுங் குழலா ரும் பொருளுநு மல்லால் வாய்ந்தபொரு ளிலதென்றும் வடிவை யிங்கே, விட்டொருவன் போயபபிறத்தல் பொய்மையென்று மேதினியீ ரனல்காற்று மெய்யே யென்றுங், கட்ட மிந்தவ் வுடல்விழுமை வீட மென்றுங் கண்டறியுங் காட்சி யோ காட்சி யென்று, முட்டெளிந்த சுரர்குருவி னுழைசசார் வாக னொழியலோ காயதநா லுண்மை நாலே. 5

உருவினை யொழிய வேறே யொருவனுண் டுணர்வாய் நிற்ப
னிருவினை யிபற்றித் தானே யிருவினைப் பயனு மெய்துந்
திருநெறி யிதுவே யென்று தேறுவ ராகா யப்பூந்
தருவளர் கனியை வாங்கித் தாமுணச் சமைக்கின் றாரே. 6

## குறுந்திரட்டு.

### சாருவாகம்.

அம்பரமான் மாவீச னறம்பாவ முளவல்ல
செம்பொனுமா தருமல்லாற் சிறந்தபொருட் பிறிதில்லை
நம்பனவை காட்சியுட னுசமே வீடென்ன
வெம்பர்குரு சார்வாக வுரைத்தனன்லோ காயதனே. 204

இல்லாத பொருளுலகி லுண்டாத லியல்பல்ல வென்றே மென்றும், பொல்லாத வழிபொருந்தும் புலைமக்க ளைம்வதியிற் பொருந்தார் மாந்தர், சொல்லாதல் பொருளாமே சுடர்வாள் கொண் டோருடம்பு துணித்துப் பூத, மல்லாத பொருள்காட்டார் காட்டழைப்பு நின்றழைப்பா ரளியற் றோரே. 7

வேட்டதழன் முதலாகத் தாமிறநது தீவேட்டோர் விண் போய்ச் சேர்தல், காட்டழலால் வெந்தமரந் தளிரெழுந்து மலர் பூத்துக் காய்த்தலாகு, நாட்டிலுயி ரிழந்தார்தம் புதல்வர் செயு நல்வினையா னலத்தைச சேர்தன், மாட்டியசெஞ் சுட ரவிந்து பின்சொரிந்த நெய்யினால் வளர்கை காணே. 8

### மெய்ம்மொழி.

உண்டலு முடையு மின்றி யுறக்கமு மின்றி யோய்ந்து
வண்டுவார் குழலி மார்பான் மருவுத லின்றி வற்றித
தண்டலில் சிறையே போலத் தவபபடு முடலுக் கியாங்க
ளுண்டெனு முண்மை யேறு துள்ளத்தின் கலக்கந் தன்னால். 9

சுத்தநீ ராடி வெள்ளைத் துகிலுடுத் தகிலின் றூபம்
வைத்துமெய்க் காரம் பூசி மாலையுஞ் சாந்துஞ் சாத்தி
யுத்தம மங்கை மாரோ டுறைநதுண்டி பாலோ டுண்ணச்
சித்தமுந் தெளிபு மித்தைச செய்துநீர் தெளிந்து தேறீர். 10

சாத லெவர்க்குந் தவிர்விலை வாறு ளதுதன்னில்
பாதி யுறககத் தேகழி வாகும் பாதிக்கே
தீதுறு நோயிற் சென்றழி வாகுஞ் செயலில்லைப்
பேதையர் போகம் பெறுவது காணும் பெறுமோரே. 11

(நிராகரணம்).

### சமயாசாரம்.

அன்னத்தி லிருநீர் மெய்யே லன்னமுன் பாக்கி னோரா
ரன்னத்தி லிருநீர் காணு மாக்கையா மாறெ னன்றி
யன்னத்தை நுகர்ந்த யாக்கை யிழைந்திடத் திருநீ ரென்னி
லன்னத்தி லிருநீர் தோன்று மதற்குமுன் பாக்கை யுண்டோ. 12

ஆதலா லன்னந் தன்னா லாக்கைசம் பவியா மற்றுந்
தாதுவா முடல்க டம்மில் விளைந்தநீ ராக்கை யென்னின்
மாதரார் மைந்த ரோடே மகிழ்ந்துழை யிருநீ ரென்றும்
பேதமா முடல்க ளாகா பிறப்புடை யிருநீ ரன்றே. 13

* உடலாகா திருநீர் நாளு முக்கமே தனமாய்ப் போகை
யுடனுனே யுயிரா காவ லுயிர்போக † வுடல்சா வாயா
லுடலாவ திருநீர் சார்வா லுயிர்வந்து புகுதி லையா
வுடலாவி வருமா றோரா யுரைக்கையைத் தவிரி னித்தான். 14

† வுடல்வே மத்தா என்றும் பாடமுண்டு.

தாம்பூலக் கூட்டத்துச் சிவப்பெழுந் தன்மை போல
வாம்பூதக் கூட்டத்தி லுடம்பி லுணர் வெழுமென் பீர்
தாம்பூலம் புணர்ந்தாரார் தாம்பூல நிறம்போல
வாம்பூதத் துளவுடம்பு முடம்புண் டே லறிவுண்டாம். 15

சித்தாந்த தீபிகை.

* உடம்பினி லுணர்வா மென்னி லுதித்திடுங் காட்டத் தீப்போ
லுடம்புள வளவு பாங்கே புணருரு முறைய வேண்டு
முடம்பது கிடக்க விங்கே புணர்வது போத லாலே
யுடம்பினி லுணர்வு வேறு ‡ புணர்வினி னுணரு மன்றே. 16

‡ முணர்வினி னுணரு மன்றே என்றும் பாடமுண்டு.

* ஓங்கிய மரத்தின் † மீண்டு முதிர்ந்தவச் சருகெ மாது
வாங்கெனு விறந்த வாக்கை யழியுபின் பிறவா தென்னி
னோங்கிய மரம தன்றே யுதிர்ப்பது தளிர்ப்ப தையா
வாங்கது போல வான்மா வாக்கைவிட் டெடுக்கு மன்றே. 17

† மீதே யுதிர்ந்தவச் என்றும் பாடமுண்டு.

* கோலமாங் கலைகள் † கூடி யிறந்தபின் சிறந்துங் காகிப்
பாலனாய்ப் பிறந்து பைய வளர்ந்திடு மதியே போலத்
தூலமா முடல்விட் டான்மாச் சூக்கும வுடலாய் நின்று [றும்.
மேலுஞ்சென் றிருநீர் தோய்ந்து வினைவசத் துடலுட் டோன்

† கூடிக் குறைந்துதேய்ந் திறந்த பின்னும் என்றும் பாடமுண்டு.

* வினைப்பய னில்லை யாகின் விரும்பியே நீதா னுளு
நினைத்தெழுங் கரும மெல்லா நினைத்தவா முடியா வாறெ
னினைத்துமுன் வசமொன் றின்றி யாக்கமு மழிவுங் கண்டான்
முனைப்பவத் தளவா ‡ முன்றன் முயற்சியின் பலமென் றோராய்.

† மிம்மை யென்றும் பாடமுண்டு.

* இறந்தவர் பிறவா ராகி னிருவினை யில்லை யாகி
னிறந்தவர் பெறுவ தென்னே யறியாதா ரிழப்ப தென்னே
கறங்குபோற் பிறந்தி றந்து கடுவினைத் துயர மெல்லாஞ்
செறிந்தனை கெடுவாய் முத்தித் திறமுண்மை யுணமென் பாயே. 20

அனந்தபோதம்

ஓலு மொன்பது வாசலி னூத்தையுஞ்
சாலும் போலும் வயிறுந் தசைகளுஞ்
சேலு நீருஞ் செறிந்த புழுக்களுந்
தோலு மோசொலு முத்தியின் பத்திரம். 21

என்புந் தோலு மிறைசியு மச்சையு
மொன்ப தாலு மொழுகிடு மூத்தையும்
புன்பு லாலும் புழுவும் பொதிந்துடற்
றுன்ப மோசொலு முத்தியின் பத்திரம். 22

ஒக்க வொன்பது வாயிலி னூத்தையும்
புக்கு நாற்றப் புழுக்கள் புரண்டுடற்
கக்கி விக்கிக் கடுவினை நோய்களாந்
துக்க மோசொலு முத்தியின் பத்திரம். 23

சாற்றும் வெற்றிலை தானிலை யாயிடு
மூற்றுப் † பானை யெனும்படி நாயிறை
தூற்ற பாய்பிக வூத்தைக யுலாவிடுந்
தோற்ற மோசொலு முத்தியின் பத்திரம். 23

† பாலை என்றும் பாடமுண்டு.

லோகாயதம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் 571.

## 4. மீமாம்சை.

விஷயவிளக்கம்.

ஓதிய வேத நிந்தை யுரைப்பதா யுணர்வொன் றில்லா
வாதியர் தம்மை விட்டு வைதிகப் பொருளை நாடக்
கோதறு மறையி னீதி குலவுமீ மாம்சை தன்னைக்
காதலா லுரைக்க லுற்றே னதனைநீ கருதி டாயே.

மெய்ம்மொழி.

† அறிவுறு மனேக மான்மா வனைத்துமும் வியாபி பத்தி
பொறியுறு குணமா மென்றும் பூதமீ ருடல்க ளாகிச்
செறிவுறு நரக சொர்க்கஞ் செய்த ‡ நல் வினையான் முத்தி
பிரிவுறு மறிவு சத்தம் பிரமமீ மாம்ச ருக்கே.

† அறிவுறிலனேக என்றும் ‡ வல்வினை அல்லது வல்வினை என்றும் பாடமுண்டு.

அஞ்ஞானநிவிர்த்தி.

உண்டான பொருளைமறை யுரைத்த தென்று மோவாமற் காரியத்தை யுரைக்கு மென்று, விண்டார்க்கு ஞானத்தால் விடு மில்லை வினைகடமை விடுகைக்கு விதியு மில்லைக், கண்டானு முலகு தனைக் கர்த்தாவேகாண் காரணனு யிருப்பானே யீசனில்லை, யுண் டாகிற் சுவர்க்கமல தொன்று மில்லை யோத்தினுக்கு மிதுபொரு ளென் றுரைக்கின் றோமே. 3

கன்மத்தா லிந்திரனார் கதியைக் காணக் கதியென்று காரியத் தோ டுணர்வைக் † கூட்டிச், சன்மத்தா னெடுங்காலஞ் சரித்துப் போந்த சாதனத்தாற் றேவர்கதி தன்னைச் சார்ந்து, தன்மத்தாற் பிரமபுரந்தனைய டைந்து சதுர்முகனார் தம்மோடே சமைந்திருந்து, பின்பத்தாற் பிறவிகளை யெல்லாம் விட்டுப் பிரமத்தோ டொன் றுகை பெறுமென் றோமே. 4

† கூடி என்றும் பாடமுண்டு.

காரியமாங் கருமத்தை யெல்லாஞ் செய்து காமியமா வக் கரும மெல்லாம் விட்டுக், கூரியனாய் மேற்குறையுஞ் † செய்வோ மென்று குறித்திருந்த வவனுடைய குரம்பை வீழ்கா, வீரியல்லா மிருவினைக ளெல்லாங் கூடி யிவனுக்கோர் குரம்பையினை யெடுத்த தற்கே, வாரியுணக் கருமபல மாண்டு நின்றால் வானகத்தே முத்தியென மதிக்கின் றோமே. 5

† செய்யோ என்றும் பாடமுண்டு.

(நிராகரணம்).

மெய்ம்மொழி.

ஆன்மாவின் வியாபி நிற்க வதன்குணம் புத்தி யென்று
யான்மாவி னளவு முண்டா மங்கியின் குணமே போல
வான்மாவு நிற்கப் புத்தி யவத்தைகட் டாமுங் கூடா
வான்மாவு மவத்தை கொள்ளி லானியாம் வியாப மன்றே. 6

பசுப்படுத் தியாகம் பண்ணிப் பலத்தினிற் சுவர்க்கஞ் சென்
புசித்துமீண் டிழிந்து பின்னும் பூமிமேற் பிறக்கு மென்று
நசித்திடுங் கொலைபா வத்தா னரகுறுங் கிருமி † யாகும்
‡ வசித்துநீ சுவர்க்கந் தன்னை யடைபவர் பலமென் பாயே. 7

† யாமென்று என்றும் ‡ விசித்துநீ சுவர்க்கந் தன்னை மிகுபோக பலமென் றுயே என்றும் பாடமுண்டு.

எல்லையி றனங்க ணோர்ந்து பசுப்படுத் தியாகஞ் செய்தாய்
சொல்லிடின் முள்ளிப் பூவின் றேன்சுவை தானு மில்லாப
புல்லிய சுவர்க்கந் தன்னிற் போய்மீளு மளவுக் கேநீ
நல்லியன் மறைக ளோது நல்லமெய்ஞ் ஞானி ஞானி. 8

சத்தமா னதுச யப்புத் தற்பரம் பிரம மென்று
யத்தவத் தோதான் சத்த மன்றியே நிரத்த வத்தோ
நித்தம்வே றத்த வத்தே னிரத்தக மென்னிற் கேளாய்
கத்துகா வோலை செக்குக் கடலொலி போல்வ சத்தம். 9

சுருதிமந் திரங்க டம்மைச் சொல்லிநாஞ் செபங்கள் பண்ணக்
கருதிய பலங்கொ டுக்குங் காரண மிதுவே யென்றே
விரிதரு பிரம மென்று விளம்பிய சத்த மன்றிப்
புரிதரு பொருள்வே றில்லை யென்றனை புகலக் கேளாய். 10

அரிந்திட வேண்டு மாங்கே யரிவாள தென்ற போதே
பரிந்துநீ யுண்டா மென்னப் பசியது போக வேண்டு
மெரிந்திட வேண்டு மீண்ட னெரியென்ற பொழுதி னிவ்வாய்
புரிந்திடுஞ் சத்தந் தோறும் பொருள்கண்மற் றில்லை யாகில். 11

சத்தந்தான் பிறப்ப தென்றுந் தானுதந் தோட்டத் தாலே
யொத்தவான் குணம தாகு முரைப்பதோர் பொருள்கு றித்து
நித்தமன் றத்தந் தோறு நேர்ந்தெழுந் திறக்கு மாங்கே [னே.
வத்துவென் றித்தைச் சொன்ன மதியின்மை யென்னே யென்

சத்தந்தா னுருவத் தன்றிச் சயம்புவேற் றுனே யென்றுஞ்
சத்தமாச் சத்தி யாமை சயம்புவன் றுமே யையா
சத்தமா நாத சத்தி தானெழுந் தன்மை காணாய்
சத்தமாஞ் சத்தி காணிற் சத்திமான் றுனே தோன்றும். 13

குறுந்திரட்டு.

சத்தமெய் யாப்பிரம மனேக மாத்மா சகலமுந்தான் வியாபிகளா மாத்மா வுக்குப், புத்திதான் குணமாகும் வினைக டாமே பூதமீ ருடலாக்கிப் பொருந்து வித்துத், துய்த்தலாஞ் சுவர்க்கநிர யத்தி லின்பந் துன்பங்கள் பயன்கருதாக் கன்மத் தாலே, முத்திபா டாணமென வுணர்வொன் றின்மை யதுவேமீ மாம்சகன்றன் மொழிவுற் றனே. 205

செய்தசட வினைதானே பலிக்கு மென்றான் சேதனனு கியசீவன் சடமே யாகை, யுய்த்தரும்வீ டெனவுரைத்தா னதுவுஞ் சொர்க்க வுலகத்தே போமென்று னுயிர்வா னத்தின், மைதருமோர் குணம்பிரம மென்றான் மாசின் மறையோதி மன்னுபரம் பிரம மோரான், பைதலிவன் றன்னை மீமாம்சை சைம் பாடாண்ட னென்வுரிஞர் பகர்கின் றரே. 206

முத்திபா டாணம் போல முழுதுணர் விறக்கை யென்றாய்
சுத்தசை தனமா ஞானச் சொரூபமா மான்மாத் தன்னைப்
பெத்தமா மலங்கள் பொன்றப் பேரறி வாத லன்றோ
சத்தமே பிரம மென்று யிதுசொலத் தட்டெனையா. 14

புத்தி முத்திக்க ணில்லை யாதலாற் போத மின்றே
லொத்துயிர்க் குணமே புத்தி யென்றவன் னிட்டத் தாலே
நித்தமாய்க் குணியி ருந்தா னிகழ்ந்திடுங் குணமு மென்றாஞ்
சுத்தமாஞ் சுடரி ருக்கச் சோதிதா னசியா தாங்கே. 15

தூசது மாசு போனாற் சொரூபமாம் வெண்மை போமோ
பாசமா மலங்கள் போனாற் பண்டை யறிவு போமோ
வாசிலா முத்தி யுண்மை யங்கணத் தமிழ்து நின்மூன்
மாசற வுரைக்கை யையா வார்த்தையு மையு மூன்பால். 16

அனந்தபோதம்.

என்புக்கடம் வானுற மாமறை யேயணியிட்டுத்
துன்புற்று வெள்ளி தொடங்கிச்சுர ராகுமுண்மை
வன்பொற் கடல்வற்றி மச்சங்க டுன்னவெண்ணி
யன்புற் றொருபூசை யருந்தவஞ் செய்தல்போலாம். 17

முப்பொழு தளவி னீரின் மூழ்கிய முறைமை யாலே
செப்பிடுஞ் சுருதி யோதித் திரிபவர் தேவ ராகி
னெப்பொழு தளவி னீரின் மூழ்கியிட் டேறிக் கத்துந்
தப்பனை யினமு மும்மிற் சாலவுஞ் சுரரா வேண்டும். 18

பாடுறு மறையி னாலே பகர்வுறு சமிதை தன்னைச்
சூடுறு தழலிற் சுட்டார் சுரர்களா யிடுவ ராகி
னாடுகள் சுடுவார் நல்ல நகரிகள் சுடுவார் கண்ணிக்
காடுகள் சுடுவா ரும்மைக் காட்டிலுங் கடவு ளாவர். 19

மீமாம்சை முற்றிற்று.

ஆகச்செய்யுள் 590.

---

## 5. நியாயம்.

வினாவிளக்கம்.

ஓதிய வேத மார்க்கத் துரைத்தமீ மாம்சை யென்னும்
வாதமாங் கோதை விட்டு மற்றதை யாயி கத்தை
யேதம தறவே யுள்ள பரிசெலா மெளிதிற் கூறக்
காதலா லிதனை யுங்கான் கருதிநீ கேட்டி யையா. 1

மெய்ம்மொழி.

* திரவிய மைந்து நான்குஞ் செறிகுணம் பத்தோ டேழு
நிரவிய கரும மைந்து நிகழிலக் கணங்கண் மூன்றும்
விரவிய தகில மான்மா வியாபிகள் குணங்கள் புத்தி
காவியல் கட்டும் வீடுங் கன்மமுங் கத்தா வாலும். 2

* சேறிதிர வியமைம் பூதந் திசைகால மனமோ டான்மா
வுறுகுணம் பரிச மாதி நாலொடெண் பரிமா ணந்தான்
பிறிவொடு கூட்டம் பேசுஞ் சராசரம் புத்தி யின்பங்
கிறிதரு துன்பம் வேண்டல் வேண்டாமை முயற்சி கேடே. 3

* ஏற்றிய கரும மைந்து மிலங்கிட வறியக் கூறிற்
போற்றிய பக்குவா பக்குவம் புகன்றிடும் விரிவொ டுக்க
மேற்றிய கரும மென்றுங் கைந்தினி னிலக்க ணந்தான்
சாற்றிய விசேடஞ் சாமா நியஞ்சம வாய மாமே. 4

(நிராகரணம்).

சித்தாந்ததீபிகை.

* சட்டமே யகில மான்மாச் சகலமும் வியாபி புத்தி
யிட்டமாங் குணங்கள் கன்ம மீசனு மெவ்வு யிர்க்குங்
கட்டுவீ டிரண்டி னுக்குங் காரண மென்று கொண்டு
தட்டினை யோரா நையா யிகனார்தாஞ் சாற்ற லென்னே. 5

* புத்தியு மான்மாப் போல வியாபியாங் குணம தென்னி
னொத்துறு பரிச மெல்லா மொருபொழு துணர வேண்டுஞ்
சத்தமுன் விடய மெல்லாந் தனித்தனி யுணரக் கண்டு
மத்தையே வியாபி யான வான்மாவின் குணமென் பாயே. 6

* வியாபக னாகு மான்மா விரிவுட னொடுக்கங் கூடா
வியாபகன் குணமு மங்ஙன் வெய்யதீக் குணம்போ லன்றே
வியாபகஞ் சுழுத்திக் கில்லைத் திரியவும் விரியக் கண்டோம்
வியாபகக் குணங்க ளீரே விரிவுட னொடுக்கஞ் சொல்லீர். 7

குறுந்திரட்டு.

முன்வினைப் பயன்புசிக்க மூர்த்தியாய் மூர்த்திதன்னாற்
பின்வினை பிறந்ததாலே பிறந்திறந் துழலுமென்றுங்
கன்மமு மாயைதானுங் காரணம் பிறப்புக்கன்றித்
தன்மமன் றருளாலீசன் றான்செய்வ னென்னினன்றே.

* கன்மமுங் கத்தா வானுங் கட்டுவி டிரண்டு மென்றாய்
கன்மமோ கத்தாத் தானோ கட்டினைப் பண்ணு கின்றார்
கன்மத்தாற் கத்தாப் பண்ணிற் கன்மமே கத்தா வாகுங்
கன்மந்தான் செய்த தன்றாங் கத்தாவின் செயல தென்னில். 8

* செய்வினை புசிக்கக் கத்தாச் செய்திடு மென்னிற் கேளாய்
செய்வினை புசிக்கக் கத்தாச் செய்திடா தொழியி லென்றுஞ்
செய்வினை புசிக்க வேண்டா செறுதுயர்ப் பிறப்பு மில்லைச்
செய்வினை புசிப்பிப் பான்போற் றீவினை யாள ருண்டோ. 9

* பிறக்குமவ் விடத்திற் றுன்பம் பிணிபல வுறுகை துன்ப
முறக்கமு முணர்வுந் துன்ப மொண்பொரு டேட றுன்ப
மிறக்குமவ் விடத்திற் றுன்ப மிழுக்குடைப் பிறப்பை யென்று
மறத்தனு மீசன் செய்யி னருளினுக் கானி யையா. 10

* ஓதுயிர் பெத்த நீங்க வுரைப்படி யிறைவற் பாவித்
தேதமில் சடமே யென்ன விருப்பது முத்தி யென்றாய்
போதமா முயிரின் முத்தி பொய்ச்சட மாவ தேநன்
றீதையா வறிஞர்க் கேறு திசையுமீ மாம்ச ருக்கே. 11

தேரை தெங்கிள நீர துண்டது வென்று செப்புமன் னீதி போற், † பேரு நன்றுன் மதத்தி னுக்கு நியாய மென்று பிதற் றினு, யோரி னெண்மறை யாக மங்க ளுரைத் தொவாவனி யாய முன், னேர தொன்று நியாய நன்றினி நிற்க நிற்க னையா யிகா. 12

† பேரினின்றவுன் மத்தனுக்கு நியாயனென்று என்றும் பாடமுண்டு.

நியாயம் முற்றிற்று.

ஆகச்செய்யுள் - 602.

## 6. வைசேடிகம்.

வினாவிளக்கம்.

ஓதிய வேதநீதி யுற்றுமொன் றினையு மோரா
வேதமில் லிருளேயென்ன விசைத்திடு நியாயம் விட்டுத்
தீதில்வை சேட மார்க்கத் திகழ்தரு பொருளை மைந்தா
நீதியா லுணரும் வண்ண நெறிதர வறைது வன்கேள்.

சித்தாந்ததீபிகை.

* மைவண்ண மில்லாத பொருள்க டம்மால் வாய்த்ததரி சனம்வைசே டிகமே யன்றோ, வவ்வண்ண மிதனுடைய மதமுங் கூறினான்மாக்கள் சடரா கி யனேக ராகி, மெய்வண்ணங் குணங் குணியா யவத்தை மேவி வியன்பாச பெத்தர்களாய்ப் பிறந்திறந் தே, யுய்வண்ண மதுவின்றி யுழல்வார் தங்கட் குயர்வீடு பாவனை யா லுளவா மன்றே. 2

* அரும்பாசத் தகப்பட்ட பெத்தான் மாக்க ளனேகபவந் தமின்முயன்ற வறங்க டம்மாற், றிரும்பாத பத்தியது சிவன்பா லுண்டாய்ச் சிவனையே பாவித்தங் காரா திக்கப், பெரும்பாலுங் கருடனையே பாவித் தத்தாற் பெருவிடந்தீர்ந் ததுபோலப் பாசம் விட்டுப், பரன்போல நிர்க்குணனு யவத்தைக் கெட்டுப் பரனொத் தங் கிருப்பதுவே பகர்வீ டாமே. 3

(நிராகரணம்).

* கூறரிய வான்மாக்கள் சடரே யென்றாய் குறித்துணரிற் சடங்களெலா மனுன்மா வன்றோ, வேறுகுணன் முத்தியினிற் குணனே யென்றாய் வெம்மைபோ யனலிருக்கை மேவுமோதான், மாறரிய வவத்தையினிற் படிவ ரென்றாய் மையன்மன மாதிகளுன் னான்மா வோதான், றேறுமுணர் வேதுமிலாத் திண்ணற் கேற்ற தெரிசனம்வை சேடிகமாய்ச் சிறந்த தன்றே. 4

* பாவனையான் முத்தியது வாகு மென்றாய் † பாவித்த தக் கணம்வங் கழியாதோதான்,மேவரிய கருடனையே பாவித் தத்தால் விடந்தீர்ந்த வாறதுபோ லென்னிற் கேளாய், தாவரிய கருடனை முன் கண்டாற் போலத் தற்பரனைக் கண்டோபா வித்தா யன்றே, யோவவிலாப் பாவ கத்தாற் பரனீ யாகா யொப்பாகாய் பாசமு மங் கொழியாய் காணே. 5

† பாவித்த தக்கணமங் கழியா தோதான் என்றும் பாடமுண்டு.

வைசேடிகம் முற்றிற்று.

ஆகச்செய்யுள் 607.



# 7. சாங்கியம்.



### வினாவிளக்கம்.

புத்தனை முதலா வேதப் † புறம்புறச் சமய மூன்றும்
சுத்தமீ மாம்சை யாதி நூல்களாறு மதமிம் மூன்று
மித்தகைத் தாறும் விட்டங் கெழின்மறை நெறிவி கற்பா
யுய்த்தசாங் கியத்தி னுண்மை யதனையு மொழிவன் கேளாய். 1

† புறப்புறச என்றும் பாடமுண்டு.

### சித்தாந்ததீபிகை.

* இலங்கிய புருடன் மற்று மேய்ந்தநற் பகுதி யென்னத்
துலங்கிய விரண்டு முண்மை சொல்லிய பகுதி யின்பான்
மலங்கெழு மானாங் காரம் † வகுத்தன விகுதி யெல்லாஞ்
சலங்கெழு கட்டும் வீடுந் தனக்குத்தான் புருடன் செய்யும். 2

† வகுத்ததன் என்றும் பாடமுண்டு.

* பகுதியின் விகுதி யாகிப் பரந்தெழு மின்ப துன்பந்
தகுதிநற் சித்தாந் தன்மே லேற்றுதல் பெந்த மாகும்
விகுதிநற் பகுதி யெல்லா மெனக்கிலை யென்று பார்க்க
வகலுமற் றதுவே வீடா மருளமற் றிறைவே றின்றே. 3

### (நிராகரணம்).

* பகுதியும் பரமன் றானு முண்மையேற் பரமன் றன்னை
விகுதியால் கட்டு பாதி மேறுநீங் காது நிற்கப்
பகுதிபான் மானாங் காரம் படைத்தன முழுது மென்றாய்
பகுதிமா னாங்கா ரந்தான் சேதனம் படைக்கு மாறென். 4

* அறிந்தரு ளீசன் வேண்டா வான்மாவே கட்டும் வீடுஞ்
செறிந்திடு மாகிற் * றுன்பப் பெத்தந்தான் செய்த தென்னே
மறந்தன னாக மப்பால் † வீடுதா னறியா தெய்த்தங்
கறிந்தருள் குரவற் றேடி யலமவரப் பெறுமோ சொல்லாய். 5

† வீடுதேர்ந் தறியா என்றும் பாடமுண்டு.

ஆதலா லோத லேது மறிவிலாச் சாங்கி யாவுன்
றீதிலா மதமுன் போலத் தெளிந்தவர்க் கொப்ப தல்லால்
வேதவா கமங்க ளாய்ந்து மெய்யுணர் வுணர்ந்த நல்லோர்க்
கேதமா யிருப்ப தென்றா லினியுரை வேண்டா வுன்பால். 6

சாங்கியம் முற்றிற்று.

ஆகச்செய்யுள் 613.



# 8. சைவம்.

———

விஞவிளக்கம்.

உரைத்தசாங் கியமீ ருக வுள்ளவச் சமய மெல்லா
நிரைத்தருள் செய்த ளித்த நீதிபோ லாக மத்தி
னுரைத்தசை வாதி யாறு முண்மைநற் பரிசு மெல்லாங்
கருத்துற வடிய னேற்குன் கருணையான் மொழிய வேண்டும். 1

சித்தாந்ததீபிகை.

சாற்றுமச் சைவஞ் சுத்தஞ் சம்மேள மெனவி ரண்டா
மேற்றதிற் சுத்த மெண்ணிற் பேதமாம் பேதா பேதம்
போற்றுமச் சம்மே ளந்தான் புகன்றுள விரண்டின் முன்னந்
தோற்றுமச் சுத்த சைவத் துணிவுறு பொருளுங் கேளாய். 2

* பதிபசு பாச மூன்றும் பார்த்திடின் வியாப நித்தம்
பதியவன் சத்தி மூன்றும் பாசத்திற் கனந்த சத்தி
விதியினாற் பசுவ ணாதி மலநிறை விமல னாகுங்
கதிபசு பதியை யொத்துக் கண்டுகொண் டிருத்த லாமே. 3

* பதியாவான் பேரறிவன் பசுவாவான் பதியன்றி
மதிதானுஞ் சிறிதாகி மறவியொடு மவிச்சையுளன்
கதிநாளுங் காட்டாத கார்மலமுஞ் சடமாகும்
பதிதானும் பசுமலமும் பார்க்கினிவை யனாதியாம். 4

(நிராகரணம்).

* பதிபசு பாச நித்த மனாதியாய் வியாபி யென்றாய்
பதியினுக் கேற்ற மென்பின் பார்க்கினங் கவைதா னொக்கும்
பதியவன் சத்தி மூன்றேற் பாசத்திற் கனந்த மாகிற்
பதியினிற் பாச மன்றோ பரமது வாவ தையா. 5

* பதியலாற் பசுவை யார்த்தார் பாசமோ பதிதா னேயோ
பதியெனிற் பாசம் வேண்டா பாசமுன் பிலையு மாகும்
பதியல பாச மென்னிற் பதிதனால் விடுங் கூடா
மதியுடைச் சைவா வுன்றன் மதிநல மிருந்த வாறென். 6

* சுபாவமே மலனென் மாவின் மலங்கெடல் சுகவீ டென்றாய், சுபாவந்தான் கெடுமே யாகிற் பதிசுத்தன் தானுங் கேடாஞ், சுபாவம்போய்ச் செம்புபொன்னா மிரதத்தா லதுபோலென்னிற், சுபாவமாய்ப் பதியப் போதவ் விரதம்போ லொழியுங் காணே. 7

* சித்தமே வடிவ தாகிச் சிவன்சிவன் முத்தி தன்னி
லொத்துற வொருவன் காட்ட வொருவன்கண் டிருப்ப தென்று
பத்தரு மவர்கட் கப்போ துடலொடு கரணம் வேண்டும்
பித்துறு சைவா முத்திப் பேரின்பத் திரண்டுண் டாமோ. 8

* முத்தனே முத்தி யீவான் முத்தான்மா வியைய மாட்டா
னத்தகைச் சிவனே முத்தன் குருமுத்தான் மாவா மென்றாய்
மெய்த்தகு முத்தி யீவான் வியன்குரு வொழிந்து மற்றோர்
மத்தனே கெடுவாய் சைவா மலர்க்கழல் சூட்டி னாரார். 9

அங்கையிற் கனிபோன் முத்தி யனுபவ மாகப் பெற்றா
ரிங்குநற் சைவா நீயே யன்றிவே றாரு முண்டோ
துங்கநற் சிவமு நீயுஞ் சொல்லிய குருவு மென்னப்
பங்குபட் டிருக்கு முத்தி பெருமனே பலித்த தோதான். 10

தத்துவந் தொண்ணூற் றாறு முதற்பல வவத்தை யைந்த
னத்துவா வனேக மாமற் றளவற வெவையுங் கொண்டு
மெத்தகக் கழியச் சொல்லி மெய்ஞ்ஞானஞ் சித்தத் துள்ளே
சத்திய மாக வந்து பலிப்பது சைவர்க் கேயோ. 11

அவிரோதபோதம்.

ஆதிநா யகனமரர்க் கறியொ ணாதா னாணைக்கட் களப்பரிய வரனை மைய, வேறுமா கமங்கடமிற் குறைவுண் டோதா னுணக் கவற்றின் மாற்பரிய முணர்வொ ணாகான், காதும்வா தங்களறத் தானே வந்து காசான்றி யவையவனைக் கழல்கள் சூட்டி, யோது மொரு மொழியாலே யுணர்த்தி னப்போ தொண்சைவா கடம் பொருளுங் குணா லாமே. 12

சுத்தசைவம் முற்றிற்று.
ஆகச்செய்யுள் 625.

---

## 9. சம்மேள சைவம்.

---

சித்தாந்ததீபிகை.

* சித்தமாம் பதியினொடு பசுபா சங்கா ளிகளமதாம் பசுவிற் குப்பாசந் தானு, முத்துமும் பதியவனு மறுதியாக முழுமலனும் பசுப்பெத்த மவனே மெயாம், பத்திஞா னத்துறுமப் பாசங் கெட்டுப் † பதியோடு மொளிக்கொன்றாய்ப் பகரு முத்தி, சுத்தமாஞ் சம்மேள சைவ மன்றித் துரிசறுநற் பொருளுளதோ சொல்லுங் காலே. 1

† பதியொடுமே விக்கொன்றாய் என்றும் பாடமுண்டு.

(நிராகரணம்).

* அனாதியே பதிபசுக்கண் முத்தி பெத்த மாமென்றே பசு வுக்கு முத்தி சொன்னா, யனாதியாம் பசுப்பெத்த மொழியிலங்ங னவில்பதி யனாதி முத்தி யொழியா தோதா, னனாதியாம் பாச மது நித்த மாகி னதுகெடுமோ விட்டிலதன் சத்தி யென்னிற், றனாதனலின் சுடுகையதாஞ் சத்தி கெட்டுத் தான்குளிர்ந்தங் கிருக்குமெனச் சமைந்தாய் காணே. 2

* பதிபசுக்க ளனாதியே பேத மென்றே பாராதே முத்தியி னிலொன்றா மென்றாய், பதியினுட னொன்றுதல் பசுக்கெட் டேயோ கேடின்றி யோசொல்லாய் கெட்டே யென்னிற், கதிபெறுவான் பொன்றுமெனிற் கதிதா னார்க்குக் கேடின்றாற் கருதிரண் டொன்றாகா தென்று, மதியுடைய சம்மேள சைவா † முன்பின் மலைவுறவே மொழிந்ததற்கு மாறொன் றுண்டோ. 3

† நீதான் என்றும் பாடமுண்டு.

சம்மேளசைவம் முற்றிற்று.

ஆகச்செய்யுள் 628.

---

## 10. பாசுபதம்.

---

விருவிளக்கம்

ஓதிய சைவ மார்க்கத் துரைத்திடு மிரண்டும் விட்டு
நீதியா மிறைவ னாலி னிசழ்த்துபா சுபதத் துண்மை
யேதம தறச்சு ருங்க வெளிதினி னுரைப்ப னையா
காதல துறவே யித்தின் கருத்தையு முணர்ந்தி டாயே. 1

சித்தாந்ததீபிகை.

* பரமாணு வுபாதான மாய வற்றின் புணர்ப்பதுகா ரணமாகி யுலகம் பண்ண, வரமாக விறைநிமித்த மாகி நிற்கு மலமூன்றின் பிணிப்பாகும் பசுக்க ளெல்லாந், திரமாக வாகமத்தின் முறைமை யாலே திகழாவா கனமுதலாம் படியே யர்ச்சித், தூரமாகும் பாசமற வனுக்க ளெல்லா மொண்பதியுற் றிருப்பதுவே யுயர்வீ டாமே.

### மெய்ஞ்ஞானவிளக்கம்.

நீசமாஞ் சாதி தங்க ளிடநீச பதார்த்த மேலென்
றாசிலா வாக மங்க ளறைந்தன வென்னிற் கேளாய்
நீசமா மவருந் தெய்வ மெனநினை திடற்பொ ருட்டாற்
பேசிய வதற்கு நீயும் பிரமித்தங் கதனில் வீழ்ந்தாய். 15

நீசர்மே லாநெ றிக்கங் கருகரல் லாமை யானு
நீசமென் றவற்றி லார்க்கு நெஞ்சழு ளாமை யானும்
பேசியங் கவைய வர்க்கு முக்கியம் பிறிது கிழென்
றீசனங் கருளி னூலே யிசைத்தன னென்ன வோராய். 16

அம்மிதான் மிதந்து தோளாச் சுரையது வாழு மென்று
லம்மிதான் புணையாக் கொண்டா றிழிபவர்க ளடைவோ நீயு
மிம்மையே புலைமை யாகி யிகழுமபா தகமாம பானஞ்
செம்மைமையென் றுணர்ந்த நின்றன் றெளிவது நன்று நன்றே. 17

வாமம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் 650.



## 12. பயிரவம்.



### விநாயகம்.

ஓதிய சாத்த மென்றங் குரைத்தவா மத்தை விட்டு
நீதியாம் பயிர வத்தி னிலைமைதா னறியக் கூறி
ஞாதியாம் பயிர வந்தா னகிலமு மாகி நின்றே
யேதமில் புத்தி முத்தி யிசைத்திடு மியல்புங் கேளாய்.

### சந்தானதீபிகை

* ஆதியாம் பயிர வந்தா னட்டதத் துவங்க ளாகிச்
சோதியா மவையே வந்தெட் டாகிய கலையாய்த் தோன்றி
நீதியாங் கலைக டாமே நிகிலமாம் பெத்த முத்தி
யாதியாம் பயிர வத்தி னுண்மைபா லாயிற்கட் காமே.

* என்றவத் தத்து வங்க ளிசைந்தவவ் வடைவிற கேளாய்
துன்றுநற் சுதந்த ரந்தான் சுவேச்சையா லுலோகங் கால
நின்றவக் கிரம † பிரஞ்ஞை நின்மாண மோட னந்த
மென்றப யிரவ வெட்டா மினிக்கலை விதமு நீகேள்.

† பிரசன்ன நின்மாணம் போடணந்தா என்றும் பாடமுண்டு.

* வான்வளி யங்கி யப்பு மண்ணொண் வகைநந்த வைந்தின்
றானுறு ‡ வீச மாகுந் தத்துகலை யைந்துஞ் சாற்று
மூனமி லமுத மோடு விடகலை கார ணந்தா
ஞானவெண் கலைபா விந்த வகிலமற் றுஞ்ஞை யுங்கீகள். 4

‡ மீச ஞகுந் என்றும் பாடமுண்டு.

* ஆபத்து † விக்க பயமந்த மறைந்த நான்கின்
சாபத்தி ‡ னுத்தாரண பயிரவர் தாமோர் நால்வர்
சார்வுற்ற காலங் கருமமுணரானமை சன்மஞ்
சேர்பற்றை நாசையாம் பயிரவர் செப்பி னுல்வர். 5

† விக்கமபய என்றும் † னுத்தான என்றும் பாடமுண்டு.

* ஆகிய வாறுஞை யெட்டி ஞபத்துத் தார ணுறி
போகளை ரவர்க ளுலாற் பொலிந்திடும் போக மார்க்கம்
யோகமுங் கால பைர வாதியோர் நால்வ ராலே
சோகமி லணுக்கள் சேருஞ் சுத்தநிர் வாண முத்தி. 6

* போகமார்க் கத்த வர்க்குப பொலிந்திடு பூசை யாலும்
பாகுறு பலிக ளாலும் பண்ணுமுத் திரைக ளாலு
மாகிடும விபவ மெல்லா மன்றிமோ கமிழ்தி ரண்டால்
வேகமா மனநிர் வாண விடது விளையு மன்றே. 7

(நிராகாரம்).

* ஆதியாம் பயிர வந்தா னட்டதத் துவமாய்த் தென்று
மாதிபோ யட்ட மாய்த்தே லப்பொழு தாதி கேடாஞ்
சோதியா மவையும் வந்து துரிசறக் கலையாய்த் தென்று
யாதிபோய்ச் சடமாய்ச் சொல்லா யழிகலை யாகு மோதான். 8

* கலையதே புலக மாய்த்தேல் கலைபசத் தோசத் தோதான்
கலையது சத்தே யாகிற் † கலவியாய்க் கழியு மோதான்
கலைபசத் தேலசத்துக் காசினி முதலா மாகி
னிலையுடை மலடி மைந்த னிகலமு மாக்க வேண்டும் 9

† கல்வியாற் என்றும் பாடமுண்டு.

* இம்மையாம் போக நான்கும் பயிரவ ரிசைப்ப ரென்று
‡ யம்மைநன் றுளதோ வன்றி யில்லதோ † வுணக்கி சைப்பார்
செம்மையா லுளதேற் றினை செறிதரு மவர்கள் வேண்டா
தன்மைதா னிலதேல் வான்பூ முயற்கொம்பு தருவ ரேதான். 10

‡ யம்ம என்றும் † வுணக்களிப்பார் என்றும் பாடமுண்டு.

# 14. வைணவம்.

விருவிளக்கம்.

ஆதலான் முத்தி யாகா வவற்றினுஞ் சைவ மாதி
போதிய தெல்லா மோரி னுருத்திர மார்க்க மேயா
னீதியா னெடுமா றன்னை நிகழ்த்துமா கமங்க டம்மி
லோதிய பரிசை யெல்லா முரைசெய்வ னுணர நீகேள். 1

பேரொளிவிளக்கம்

* ஆதிமூ லந்தனதாம் விண்டு மாயை யதனாலே யுலகுயிர்க ளனைத்துஞ் செய்ய, வோதுமா மாயையினா றன் வசம தாகி யுயிர்க ளெலாம பிறந்திறந்தே யுழலுங் கண்டாய், நீதியால வசுதேவர் முதலா நால்வர் நிகரில்சமா ராதனத்தாற் பெத்தம் விட்டுத், தீதி லாப் பரமபதத் திவரோ டொன்றுப் சிவரெலாம பேரின்ப திளைப்ப ரன்றே. 2

* கருதருமூ லமதாகும் வாசுதேவர் கருடனாரா சிவரோடு பிரத்தி யும்நன், பொருவிலசங் கரவனு ருத்தரென்னப் புகன்ற வாநால் வருஞ்சமராப்ப் பின்ன ராவர், தெரிவரிய விவர்கள்சமா ராதனத்தாற் றிகழுயிர்கள் பரமபதத் † திவர்பா லெய்தி, விரவிய பின் னருமாகி வியாவின்பத் திருபபதுவே முத்திபென விசைக் கின் றேமே. 3

† திவர்போ லெயதி என்றும் பாடமுண்டு.

சித்தாந்ததீபிகை

* ஆதிபுரு டன்றிருநா ராயணன்று னறம்வளர மறமொழிய வகிலந் தன்னிற, சிதிறச வவதாரஞ் செய்துதுடட நிக்கிரகத் தாறசிட்டர் தமையும பாலித், தேதமற விலங்கியதன் னுடைச சோதிக்கே யெழுந்தருளு மெழிலவதா ரங்கடமமை, நீதியுறத் திருமகளோ டாராதித்து நிகரிலபதத தடைவுறுமந நெறியின் னமகேள். 4

ஆழியுடன் சங்கமங்க மெலாந்தரித்தே யாறிரண்டு திரு நாம மழகா விட்டு, வாழியசீ யயிணவருக் கிசைசெய்து மனனு திரு விலசசினை யே குறியாக கொண்டு, கீழுறுசா திபரேனு மவர்த மககுக் கிங்கரராய் நீறிடுபா சண்டரான, பாழரையு மனு காப்பா கவதர்க் கன்றே பரமபதங் கிடைபபதுமற றவர்கட் குண்டோ. 5

# 15. மாயாவாதம்.

வினாவிளக்கம்.

ஓதிய திருமான் மார்க்கத் துரைத்தவப் பொருளை விட்டு
நீதியான் மாயா வாத நிகழ்த்திடும் பரிசு தன்னை
யேதம தறவே யுண்மை யுரைத்திட வுள்ள மொன்றிக்
காதலா லதனை யுந்தான் கருதிநீ கேட்டி யையயா. 1

சித்தாந்ததீபிகை.

* சாற்றிய பிரம மென்று மவிகாரி சன்ன திக்கே
யேற்றிய மாயை தானிவ் வுலகுயி ரனைத்து மாகித்
தோற்றரு மனந்த பேத மாய்ச்சுழன் றழியுந் தானே
யாற்றரும் பெத்த முத்தி பேறிழ வவையு மித்தை. 2

* ஆதலா லிகழு மிதனை பரமது தானு மித்தை
யேதமி லிதமு மற்றை யகமெனு மதுவு மித்தை
யோதிய மயல்போய்ப் போத முதித்ததென் பதுவு மித்தை
சாதமே பிரம முத்தந் தானவி காரி யென்றும். 3

சாற்றிய வதுநீ யென்று தருமறை குரவர் கூற
வேற்றிய வதுவே நானென் றிசைத்தன்மாத் திரமே ஞானம்
போற்றிய வதுவு மோரிற் பொய்யதா மாயை யென்றே
யாற்றவங் கறிதன் மாயா வாதவத் துவித மையா. 4

சுத்தவத் துவித மிங்ஙன் புகலறத் துணியா வாதர்
மெய்த்தகு பிரமந் தாங்கண் டனுபவித் திடவீ டென்பர்
அத்தகு பிரமங் காணி னழிவுறு மறியா ரேது
மித்தையென் றிச்சை செய்தே விளையாடித் திரிவ ரையா. 5

(நிராகரணம்).

* அவிகாரம் பிரம மாயை விகாரமா மெவையு மென்று
மவிகார விகாரங் கண்டிங் கறிந்துசாற் றியதே தையா
வவிகார மென்னிற் றன்போய் விகாரியா மாயை யேனுன்
மவிகாரந் தானும பொய்யாய் மாயையா யழியு மன்றே. 6

* உலகுட னுயிர்மற் றேது மாகியே தான்வி ரிந்தங்
கிலகிடு மாயை தானே யிறந்துபோ மென்று சொன்னாய்
நிலவிய மறைநீ யோதி நிமலமாங் குரவற் றேடி
யலகிலாப் பிரம நானென் றறியவே வண் டியதென் சொல்லாய். 7

## 4. சதுர்த்தசநாடி.



மூலசித்தி

* இடையோடு பிங்கலைகாந் தாரியத்தி சிங்வை யியைந்த வலம புடைபூடை யெழிற்குயிழ்கண் செவிகள், வடிவாரு நாவத னின் வாணிகுகு புகழி வருபாயு விலிங்கமதா மகிழ்பிரமஞ் சுழுனை, யுடையார்வி சுவோதரையும பயசுவனியு மன்ன பான மதா கரிக்கு மூவர் நீர்கழிக்கும வருணை, புடையார்சுக் கிலைபுரு வத திடையதிகா ரகநதான் பொருவருநா டிகளென்னப் புகல பதினான் கிவைமே 1

சதுர்த்தசநாடி முற்றிற்று.

ஆகசசெய்யுள் 1089.

## 5. சதுர்த்தசவாயு.



மெய்ஞ்ஞானவிளக்கம்.

மேனோக்கி யுயிர்த்திடுநற் பிராணனபா னன்றன் விரைந்து மலங் கீழ்நோக்கித் தள்ளும்வியா னன்பி, னானோக்குங் கால்கை முதற் சேட்டையுதா னன்று னுடல்வளர்த்திச் சமான னெத்தங் குடனிறைவுண் டாக்குங், தானேகுகு முற்கரண முதனுகன் கூர் மன் சந்தநங்கண் ணிமைபடுவிக்க றுமமல்கிரிகரன்றன், மேனோக் கும் கொட்டாவி மூரிதேவ தத்த னிருநதுடலை வீங்குவித்துத தனஞ்சயன்பின் போமே. 1

சூறுநதிரட்டு.

சதுர்த்தரவாயு.

போவதா மேற்கீழ் பிராணனே டபானன புரிந்துகால் கைசேட்டை வியான. னேவுமா கதநதை வளர்த்திடு முதான னுடலினை நிறைத்திடுஞ் சமானன், மேவிழிப் பிமையுங் கூர்மனு கன்கி ரிகரன்விக் குதறும்ம லோடு, தேவதத் தன்றன் மூரிகொட் டாவி செயதுவீங் கிடுந்தனஞ் செயனே.

உந்தியின் கீழ்பான் மேலதாம் பிராண னுதரமட் டதற்குமேற் சமானன்
கந்தரத தளவு மதற்குமேல் வியானன் கரும்புரு வத்தள வதன்மேன்
மைந்துற்ற வுதானன் தனஞ்சய னுகன் கிரிகரன் வலத்திலா மிடத்தை
முந்துற்ற பிராணன் றேவதத் தன்றன் மூரிநீ ராயும திடத்தே.





தனஞ்சயன்வலந் தேவதத் தனுமிடங் கிரிக
னனந்த ரம்வல † மாமையு மிடமவல நாகம்
புனைந்து மத்திமப் பிராணனும பொருந்திட விடமே
கனஞ்செய் தோதிப காற்றினு னிற்பதிக் காயம. 2

† மாயேயு என்றும் பாடமுண்டு.

**தத்துவசித்தி.**

உதான னின்றது புருவமே லோங்கமேல் வலித்திங்
கிதாதி கண்டகூ பதது றவமைநதது வியான
னிதாதி யந்தவு தரத்துற விசைநதது சமான
னதாதி யுந்தியிற் பிராணனு மபானனு மதன்கீழ். 3

காவன்மற் றதுவாய் நின்றுறக் கத்திற் கருதுடல் பிணமெனு
வண்ண, மாவதித் தசவா யுககளு முடல மாதினை நடாத்துகா
ரணமா, யோவன்மற் றின்றி யுள்ளன விவற்றை யொககவே
தரித்துநின் றுணர்ந்து, தாவலற் றுணர்வே யாகுமுன் றனக்குத்
தகுமுடற் செயலகளொன் றிலையே. 4

மெய்ம்மொழி

அறிதரு வயிரம பன்முக கியனநத ரியாமி யோடு
நெறிதரு வேக நீடு சுவாதனும வாயுத தானும்
பொறிகளின் முகம்பி ருட்டம பொருந்திய பாத கத்தனு
செறிதரு கரணங கட்குச சேட்டையாய் நிற்கு மன்றே. 5

**சித்தாந்தத்பிகை.**

* அந்தக் கரண மதன்சேட்டை வயிரம் பன்முக் கியன்பிரபஞ்ச
னிநதத் தொழிலந் தரியாமி வாயு வீறப் பதினென்கு
முநதைப் பிராண னென்றதுமுன் கரணம் பதினென் கினையியக்கு
மநதத தொழிலாற்பதினென்கென் றறையபபெயரபெற் றதுவன்றே.

சதுர்த்தசவாயு முற்றிற்று.

ஆகசசெய்யுள் 1095.



**குறுந்திரட்டு.**

**சடாதாரமும்மண்டலம்.**

மூலஞ் சுவாதிட் டானந்தான் மணிபூ ரகம்மேல் விசுத்தியுடன்
மேலங் கஞ்சு தம்மாஞ்ஞை விளம்பு மிருமூன் றாதார
மாலோன் றனது மண்டலந்தா னுஞ்ஞை விசுத்தி யருக்கனதா
மூலா தார மனலதா மொழிவா யோக முனிவர்களே. 318

———✦———

## 6. சடுவிகாரம்.

மெய்ஞ்ஞானவிளக்கம்.

காமக் குரோத லோபமொடு கவலை மோகங் களிக்குமத
மேமத் தினையங் கழித்திடுமாற் சரிய மென்ன வேயினைவதாம்
போமக் குரம்பை தனிற்பூத விகார மாமென் றேயறிஞர்
தாமப் பகைமை யழித்துணர்வார் தம்மைக் காண விரும்புவரால்.

சடுவிசாரம் முற்றிற்று.

ஆகச்செய்யுள் 1096.

## 7. சட்பாவனை.

பரதேவசதகம்

அல்லது பிறந்த தொன்று மதுவளர் தாத தொன்று
மெல்லவே வளர்ந்த தொன்று மிகப்பருத் திடுந் தொன்றும்
புல்லிய தேய்ந்த தொன்றும் பொன்றுத றொன்று மாகச்
சொல்லுபா வனைக ளாறு முனக்கிலை யுடலுக் குண்டே.

சட்பாவனை முற்றிற்று.

ஆகச்செய்யுள் 1097.

## 8. சட்கோடி.

சதகம்.

* பற்றுதல் விடுதல் செய்பான் றன்றனைப் பிறவி னானும்
பற்றுதல் விடுதல் செய்யப் படுபவ னல்ல னவன்
மற்றையோர் தம்மைப் பற்றான் விடான்மற் றொன்றின்மை யாலே
யுற்றவிக் கோடி யாறும் போக்கொடு வரவு மில்லான். 1

சட்கோடி முற்றிற்று.

ஆகச்செய்யுள் 1098.

குறுந்திரட்டு.

அட்டாகம்.

உன்னு காமமுங் கோபமும் லோபமு
மன்னு மோக மதமாற் சரியமு
தன்னை மேலெனுந் தம்பம் பொறாமையென்
றின்ன வாக்கிடு மெட்டுமின் னாதவாம்.

## 9. சடூர்மி.

மெய்ஞ்ஞானவிளக்கம்.

அன்னபா னங்கள் பிராணன துடைமை யசோகமோ கங்களு மனமா, மன்னிடா திறப்பு மூப்புட லாகு மதித்திடிற் சடுர்மிய தியல்பா, முன்னமே யறிவு வடிவமா தலினுன் மொழிந்தவை தமக்கின்றி யுணரு, † ஞன்னதா யுள்ள தம்மையே கண்டு நடுக் கற விருப்பர்நல் லோரே.

† நன்னதா என்னும் பாடமுண்டு.

சடுர்மி முற்றிற்று.

ஆகச்செய்யுள் 1099.

## 10 காரகத்திரயம்.

பரமார்த்ததரிசனம்.

அறங்களு மறமுத லான யாவையுந்
திறந்திற முயல்வுறு மிடத்துக் காரக
மறைந்திடின் மனமுறை யுடல மாமவை
செறிந்திடுஞ் செயல்களுந் திகழக் கூறுவாம். 1

தெளிவி னெஞ்சைத் தெளியப் பிடித்தலுங்
களிசெ யும்முளந் தைக்களி மாற்றலுங்
குளிர்வி லாமை யுரார்த்திற் கொளாமையு
மெளிதின் மானத மாதவ மென்பமே. 2

ஆறுந்திரட்டு.

சடபாவனை.

யோனியுற் பவித்தலுற் பவித்துண் டாகுதன்
மேனிதான் வளருதல் விளைதல் வற்றுத
லானியா குதலெனு மாறு பாவமு
மூனமா முடம்பிற்கவ் வுணர்விற் கில்லையே. 320

சடூர்மி.

உறுபிரா ணனுக்குள வுணவும் பானமு
மறிவுறு மனமதன் மகிழ்வும் வாட்டமு
மிறுதலு மூத்தலு மியாக்கைக் கெய்துவ
வறிவினுக் கென்றுமிவ் வாறு மில்லையே. 321

தீர்த்த யார்க்குஞ் செவிக்கினி தாயின
வார்த்தை மாமருந் தேயென லாவதா
மோர்த்து மெய்ம்மொழி கூறுத லோதுதல்
வார்த்தை யாற்செய்யு மாதவ மாவதே. 3

தலைமை யந்தணர் தேவர் குரவர்பாற்
றலைத லின்றி வழிபடு வாழ்க்கையுங்
கொலை தறுகத லுங் காமங் குறைத்தலுந்
தலைவ காயத் தவமென ப்பட்டதே. 4

ஞானசாரம்.

தானநல் லொழுக்கஞ் சிலநற் சார்வு தவமுதன் முயற்சி காயத்தா, லானநல் வாய்மை பயனுரை யின்சொ லைம்மைவுசொல் விளக்கம்வாய் வழுக்கின், ஞானநற் றுணிவு நூறைவு ளன்பு நடுக்க மொன் றின்மையுள் ளத்தா, லானமில் குணமிம் மூன்றினாற் பெருக்கு முயர்ந்தவர் பிறவியு டறுவார். 5

சிவஞானநிலயம்.

பிறர்பொருள் பிறர்தா ரந்தான் பிறர்க்கித மல்லா நீதி
கறைதரு கருமமேவிக் கவித்தெழு மவாவ தென்ன
வுறைதரு மிவைநான் காதி யுண்ணுத லுளத்தி னூப
செறிதரு பாவ மென்றே திகழ்த்தின மறைக ளன்றே. 6

பயனிலா மொழிபா ராட்டல் பைசுனம் பொய்ம்மை கூற
னயமிலாக் கொடிய சொல்ல னென்கிவை முதலா யின்ப
மயமிலாச் சொல்ல தெல்லாம வாக்கினா லாகி வந்த
வயமிலா பாவ மென்றே பறையவும் படும தன்றே. 7

உண்பன வல்லா துண்ட லுயிர்களுக் குறுகண் செய்தல்
பண்பட வலியி னுமேல் பரர்பொருள் பறித்த லன்றித்
திண்படு களவிற் சேர்த றிகழ்நான் குள்ளிட் டெல்லாங்
கண்படு காயத் தாகுங் கருதரு பாவமே காண். 8

குறுந்திரட்டு.

முக்காரகம்.

ஏபவே யுயிர்க் கின்பமுந் துன்பமுந்
தீய நல்ல செயலுறை சிந்தைசெய்
காயம் வாயமன மென்னமுக் காரகந்
தூய தாய்ப்பிற விக்கென்று சாற்றினர். 322

### ஞானசாரம்.

கொலைகளவு கட்காமங் குற்ற † முயல் காயத்தான்
மலைகுறளை கடுஞ்சொற்பொய் பயனிலுரை வாசகத்தா
லலைமயக்க மலாப் பற்றுச் சினமந்தக் கரணங்க
டலைமயக்க மிவைமூன்றுந் தவிர்ந்தவரே தலையாவர். 9

† முதல் என்றும் பாடமுண்டு.

அறவினைச் சார்வான் ஞான மார்ந்திடு ஞானத் தாலே
துறவினைப் பயக்கு மிந்தத் துறவினான் முத்தி தோன்றும்
பிறவியை யறுக்கு மன்றிப் பிறப்பினு ளின்பம் பேறு
மறவினை போலொ ருத்தர்க் காத்தமாந் துணையு முண்டோ. 10

தீவினைச் சார்பாற் றீரா மயக்கமா மயக்கத் தாலே
வீவிலா வேட்கை யெய்தும் வேட்கையாற் பிறவி நோயா
மோய்விலாப் பிறப்பி னாலு முரோகத்தீச் சுடுத லாலுந்
தீவினை போலொ ருத்தர்ச் சென்றடும் பகைமற் றுண்டோ. 11

### பரமார்த்ததரிசனம்.

ஓங்கிய வுலகினி லுயர்ந்த நன்மையுந்
தீங்கின வாம்வினை யாவுஞ் செய்தற்குச்
சாங்கிய நூலிலே யுரைத்த சாதன
மீங்கிவை யைந்தையு மெடுத்துக் கூறுவாம். 12

இருப்பிட மாமுடம் பியற்று மாருயிர்
கருத்தினை முதலிய கரணங் காற்றினால்
விருப்பொடு வருந்தொழி லிவற்றின் மேலரு
ளருத்தமாந் தெய்வமொன் றாக வைந்தரோ. 13

வாக்கினா லாதன்மெய்ம் மனத்தி னாதறம்
யாக்கையா லாதலிவ் வுலகி லியாவரும்
வீக்குவார் சிலையினாய் வினையி யண்டினான்
றாக்குநா லிங்கிவை யைந்தும் வேண்டுமால். 14

இவ்வகை யேவரும் வினையி ரண்டையு
மெய்வகை யாகயா னன்றி வேறிலைச்
செய்வகை யானெனச் சிந்தை மேயினா
னய்வகை யுணர்கிலா னுணர்வு மாய்ந்துளான். 15

ஞானசூளாமணி.

தருமஞ் செய்பா பாவமற வின்று தரும மிகுதியால் [ஞங்
வருமவ் விளங்கி னிருளுமுண்டோன் பசியும்போல மறைந்துபி
கருமம் பயக்குஞ் சார்பாய காதன் மயக்கா திகளறுத்த
பெரிய வறிஞ ரிடையறுப்பர் பிறப்பாற் பிறையின் மறுப்போலாம்.

பரமார்த்ததரிசனம்.

இயாவ னொருவன் றன்னுடமையை யானென் றிருக்கு மியல்பொழிந்தான், யாவ னொருவன் றன்காரண மியாதொன் றேனும் விழைதலிலா, னா வவனிவ் வுலகத்தை யடையாக் கொன்றா லுமி னுமோா, பாவ மில்லை யவன்கொனறு பழியு மிலைப் பரமன்னு.

காரகத்திரயம் முற்றிற்று.

ஆகச்செய்யுள் 1116.



# 11. காரணத்திரயம்.



நித்தியானந்தசரிதை.

அய்யமுஞ் சலனமு நிச்சயித்தலும்
வெய்யவெங் கொடுமையும் விரத மேவலும
பொய்யிதென் றிருத்தலும் பொருந்த நோக்கலு
மையல்கொண் டிருத்தலு மனத்தில் வந்தவாம. 1

† அய்யநிச்சயித்தலு மயர்வுண டாகலும என்றும் பாடமுண்டு.

அருட்டரு மியற்கையு மறிவு மவ்வறி
விருளற வுரைத்தலு மெய்மையு மாய்தலு
மருட்டரு பாவபுண் ணியத்தின் மாட்சியும
பொருட்டரு மூவகையும் புந்தி யாருமால். 2

பாகமு முறக்கமும பண்பி லாமையு
மோகமுஞ் செய்வினை முடிவி லாமையுஞ்
சோகமுங் கீழ்மையும பயமுஞ் சொற்பல
வாகையு முறுமாங் கார மாருமால். 3

கரணத்திரயம்முற்றிற்று.

ஆகச்செய்யுள் 1119.



## 12. பாசம்.

மெய்ம்மொழி

மன்னிடு மலமூந கன்ம மாயையா மலங்கண் மூன்றும்
பன்னுமப் பசுவைப் பாசம் பந்திக்கப் பண்ணுஞ் சத்தி
தன்னொடு பாச நான்காந் தற்பாச பரிணா மத்தா
லுன்னிடுந் தத்து வங்க ளொன்றுடன் பாச மைந்தே. 1

மூலசிந்தி.

* வருத்திடும் பாச மைந்தோ வலியவா மலங்கண் மூன்றும்
பருத்திடு மவற்றின் மூல மானவப் பகுதி தானும்
விரித்திடும் பரிணா மந்தா னென்னவை வகைய தாகித்
தெரித்திடுந் தன்னை மூடிச் செடமெனச் செய்த தேதான். 2

மெய்ம்மொழி.

பிறப்பதும் பாசத் தாலே பிணிப்பதும் பாசத் தாலே
மறப்பதும் பாசத் தாலே மயக்கமும் பாசத் தாலே
யிறப்பதும் பாசத் தாலே யிளைப்பதும் பாசத் தாலே
துறப்பதும் பாசத் தாலே தொழிலெலாம் பாசத் தாலே. 3

பிணிகளும் பாசத் தாலே பேதைமை பாசத் தாலே
துணிவதும் பாசத் தாலே துன்பமும் பாசத் தாலே
யணிவதும் பாசத் தாலே யாக்கையும் பாசத் தாலே
பணிவதும் பாசத் தாலே பற்றெலாம் பாசத் தாலே. 4

பாசம் முற்றிற்று.

ஆகச்செய்யுள் 123.



---

குறுந்திரட்டு

நாற்காரணம்.

ஐயந் துணித லபிமானஞ் சிந்தனைகள்
செய்யு மனம்புத்தி யாங்காரஞ் சித்தமென
மெய்யுணரி லகக்கரணம் வினையின்வே றுகுதலால்
வையகத்தி னுற்கரண மென்றே வழங்கியதால். 323



வெய்யசொல் வெறுப்புச் செய்தல் வியன்குரு மொழிபி ழைத்தல்
செய்பசெய்ந் நன்றி கோற னீக்குண முடைய னாதல்
பொய்யுரை கொலைதா னேர்மை புகன்றுழன் மாறு கூறன்
மையுறு குணங்க ளெல்லா மாயையா மலம தன்றே. 4

மயக்கமோ டறிவொன் றின்மை மைதுனங் களவு காண்டல்
பயத்துட னுபுத்தம் பண்ணல் பாவமாந் தொழிலை செய்தல்
செயப்படு தன்குலத்திற் செய்வன செய்யா னாதல்
வியப்புடைக் காமி யத்தின் வியன்குண மிவையா மன்றே. 5

கன்மமு மனாதி யன்றே கலந்திரு வகைக ளாகுந்
தன்மமு மதன்ம முந்தான் சலித்திடை விடாதே நின்று
முன்வலி காலின் பின்னா முருகென வுயிர்கள் புத்தி
தன்வச மாக்கி நாளுந் தகைந்துடல் காட்டு மன்றே. 6

மாலதா மாயை யென்று மன்னியொன் றாகி நின்றே
மூலமாய்ச் சகத்திற் கென்று மோகமே யுயிர்க்குப் பண்ணுஞ்
சீலமாய்ப் பசுவி னுண்மைச் சேதன வடிவ மெல்லாங்
கோலமா மறைக்கும் பாசக் குணங்களின் றன்மை யீதால். 7

ஞானசாரம்.

மலங்குணஞ் சங்கங் குற்ற மேடணை வருந்து துக்கந்
அலங்குரோ தயவத்தை பெத்தம் வேதனைத் தொகையாம் பத்துந்
தலங்களா யனைத்து மூல சத்தியு பாகப் பாச
மிலங்கின்முப் பத்து மூன்று வியம்பின னரனு மையன். 8

மலத்திரயம் முற்றிற்று

ஆகச்செய்யுள் 1131.



## 14. குணத்திரயம்.



மெய்ம்மொழி.

விளங்கிய சித்த தோதான் மேவிய வசித்த தோவக்
களங்கமாங் குணங்க ளென்னிற் கருதினன் மாவிற் கில்லை
விளங்கிய விளக்கத் தன்றி விளக்கிலை திரியு நெய்யாற்
களங்கமா மையி றக்கக் காண்டல்போற் குணங்க ளன்றே. 1

* இராச தத்தினி லிசைந்தவக் குணங்கண் மூன்று முண்டவற் றினையுமிங் கியம்பி, னிராச தத்தினி லிராசதங் கருமத் திராசமோடிடை யறாமுயன் றிடுக, விராச தத்தினிற் சாத்திகமெவர்க்கு மிரக்கமோடற மிகவியற் றிடுக, விராச தத்தினிற் றாமதமெவர்க்கு மிகழ்ச்சி பாவமுற் றிடத்தொழின் முயறல். 8

* தாம தத்தினிற் சார்ந்த குணங்கண் மூன்று முண்டவை தம்மைநன் குரைக்கிற், றாம தத்தினிற் றாமத மயக்க மிகழ்ச்சி பாவமா லச்சமோ டிறக்கந், தாம தத்தினி லிராசதந் தகாத செய்யுஞ் சூதன வுணல்களி வெகுளி, தாம தத்தினிற் சாத்திக மறைக்குக் காண்வி ருத்தமாஞ் சார்நெறிப் படர்வே. 9

பரமார்த்ததரிசனம்.

வாழுஞ் சத்துவ மற்றைய விரண்டையு மறைத்துத்
தாழு மற்றைய விரண்டுமத் தமோகுணந் தழைப்பின்
வீழுஞ் சத்துவ தமங்களவ் விரசதம் விளைவி
னூழின் மற்றிவை யிரண்டுந்தாழ்ந் தொன்றுமிங் குளவாம். 10

ஒத்துநல் லறிவு மிக்க தியாதொரு போதப் போது
சத்துவந் தழைத்த தாகுந் தாங்கரும் வினைக ளேகொண்
டுய்த்துவந் தாசை கூர லோபம்வந் துற்ற போது
மத்திம குணமே சால வளர்ந்ததென் றறிநீ மன்னு. 11

தக்கது தகாதென் றொன்றைத் தானறி யாத போது
மெக்கரு மங்கண் மாட்டு மிகழ்ச்சியோ டிருக்கும் போது
மொக்கமெய்ம் மயக்கத் தோடு முறக்கம்வந் துற்ற போது
மிக்கது தமமே யென்று விசயநீ யறிய வேண்டும். 12

சாத்துவிகர் தேவரையே சரண்புகுவர் தாமதர்கள்
காத்தல்புரி வனமேயும் பூதமுமாக் கடைப்பிடிப்ப
ரேத்தரிய குணமிவற்றி லிராசதமாங் குணமுடையோ
ராத்தரென வியக்கரையு மரக்கரையு மடைகுவரால். 13

தீத்தவமும் வடிவேலோய் செப்பியவிம் மூன்றுளுஞ்
சாத்துலக மகிழ்வெய்தச் செய்கின்ற வருந்தவத்தி
லார்த்துவரும் பயன்வேண்டா தாகின்ற வருந்தவந்தான்
சாத்துவிக தவமென்று சாற்றுவர்க டக்கோரே. 14

வசையிறவு முடையரென மானுடர்கொண் டாடுதற்கு
நசையினொடு பொருள்பெறவுஞ் செய்கின்ற நற்றவத்தை
விசயமுனக் குறைசெய்தேன் மிகப்பெரியோர் செய்திடினு
மிசையவறி மற்றிதனை யிராசதமாந் தவமென்றே. 15

பேதைமையை மிகவுடைத்தாய்த் தன்னுயிர்க்கும் பிறவுயிர்க்கு
மேதமுறு பெருந்துயருங் கேடுமே யிபற்றுவதா
யாதவனும் பணியுமுறத் தாற்றுகின்ற வருந்தவந்தான்
மூதலரு நெறிமுடியாய் தாமதமாந் தவமாமே. 16

முன்செய்கா ரியப்பொருட்டு மின்றியே முடித்திதனற்
பின்பொருநற் பொருள்விளையு மென்பதுவும் பேணாதே
நன்குடைய காலத்தே நல்லிடத்தே நல்லவர்க்குத்
தன்பொருளைக் கொடுக்குமது சாத்துவிக தானமே. 17

கொண்டுசெயத் தகுங்கரும மெனுங்குறிப்பொன் றின்றியே
பண்டுசெய் செய்ததற்காப் பரிவோடு பண்ணினவு
முண்டிதனுன் மேல்விளைவென் றுணர்வோடிச் செய்வனவு
மொண்டிசையு நிறைபுகழா யிராசதமாந் தானமே. 18

வாயாத தொருபொருளை வழங்காத காலத்தே
யேயாத நிலத்திடையே யிழிந்தகுலத் தவர்களுக்கே
யாயாத வறிவினொடு மப்பிரியத் தொடுங்கொடுத்தல்
சாயாத பெருந்திறலோய் தாமதமாந் தானமே. 19

துன்ப மாய்விடம் போன்று தொடக்கத்தி
லின்ப மாகி விளைவிட மியாவாகு
மன்ப வாரமு தேயென லாவதா
மென்ப சாத்து விகந்தரு மின்பமே. 20

பொருத்த மாய்ப்புல னோடு பொறியினே
யருத்த மாயெழுந் தாரமு தென்னலாய்
விருத்த மாய்முடி வில்விட மாகியே
யிருத்த லாகு மிராசத வின்பமே. 21

தொடரு றக்க மயக்கொடு சோம்பினாற்
படவு தித்ததாய்ப் பண்ணும் பொழுதினுங்
கடன்வி ளைந்து முடிக்கா லத்தினு
மிடர்வி ளைப்பது தாமத வின்பமே. 22

நன்றாய் ஞானத் திரளாகி நாநா விதமாய் விரிந்தெங்கும்
பொன்று நின்ற பூதங்க ளோடும் பொன்றாப் பொருளாகி
யொன்றாய் நிற்ப தொன்றினையப் படியே யுணரு முணர்வதனை
யன்று மென்னார் சாத்துவிக ஞான மெனவே யறைபவரால். 23

ஊனப் படுமிவ் வுடலோறு முள்ள பொருளை யுணராதே
யீனப் படக்காண் கின்றதிரா சதமா ஞான மதுவன்றி
ஞானத் திரளாய் நின்றதைவே றுடம்பி னிடையு நாட்டிடையோர்
தானத் திடையு மடங்கக்காண் பதுதா மதமா ஞானமே. 24

தக்கசத் துவமே நிகழ்ந்தபோ திறந்தோர் தெய்வயோனிகளிலே சார்வார், மக்களிற பிறப்பா ரிராசத குணமே வளர்ந்தபோ துடம்பினைத் துறந்தோர், மிகசெழுந் தமமே விளைந்தபோதிறந்தோர் விலங்குச்சா திகளிலே வீழ்வா, ரொக்கமற் றிவற்றின் பலன்களுந் தெரிய வுரைக்கின்றே னிவற்றையு முணர்வாய். 25

சத்துவ மாந்தர் பரகதி யடைவர் தமத்துளோ ரதோகதி சார்வார், மத்திம குணத்தா ராயினோர் நடுவின் மானுடப்பிறவியாய் வாழ்வா, ரித்திற மாய வுருவமே விகாரி யானவி காரியென் றிவற்றை, மெய்த்திற னாக வறிந்தவ னறிந்த பொழுதிலே வீட்டின்ப மடைந்தான். 26

குணத்திரயம் முற்றிற்று.

ஆகசெய்யுள் 1157.

## 15. சங்கத்திரயம்.

சிந்தாந்ததீபிகை

* சாற்றிய சங்க மூன்றின் றன்மையை யறியக் கூறி
னாற்றிய வகச் சங்கம புறசங்க மான்ம சங்கந்
தோற்றுதெய் வத்தி யானம் பதுமைகொண் டாடல் சேர்வாற்
போற்றகந் தெய்வ மாகக் கருதுதல் புகலு மன்றே. 1

* அறைந்தவிப் பரிசே யன்றி யபூகுடை விடயந் தோறுஞ்
சிறந்தமுச சங்க மாமா றித்திற மென்று கொள்ளீர்
மறந்துமோர் சங்க முண்டேன மயக்கமாம் பவத்திற் பட்டுக்
கறங்குபோற் சுழல்வ ரென்றே கலைவலோ ரறைவ ரன்றே. 2

சங்கத்திரயம் முற்றிற்று.

ஆகசெய்யுள் 1159.

## 16. குற்றத்திரயம்.

தத்துவக்கிரகை

* சொல்லிய குற்ற மூன்றுந் துகளறத் தெரியக் கூறி
னெல்லையி லிராகந் துவேஷ மவிச்சையென் பனவே யாகு
மல்லது வெகுளி காம மயக்கமென் பதுவும் பேரா
மல்கிய குற்றத் தாலே வாய்த்திடும் பிறவி யெல்லாம். 1

* முக்குற்ற நீக்கின்முடி யாப்பவம் வேரோ டிம்பா
மக்குற்ற நீக்குமவ ரீசனு மாவ ரென்றே
யெக்குற்ற மும்வினைவ திங்கிவை தம்மி னென்றே
தக்குற்ற மாமறைக ளாயிரங் கோடி சாற்றும். 2

ஞானசூளாமணி.

* காமம் வெகுளி மயக்க மிவைமூன்றி
னாமங் கெட ங்கெடு நோயென்று நற்றவர்க்குக்
சேமம் பெருக விறைவன் னெவன்வாக்காந்
தோமின் றியபா மறைசொல் லிடுமென்றே. 3

பரமார்த்ததரிசனம்

காதலி னாகிய காம முலோபங்
கோதுற வேசுடு நீங்கர் கோப
மாதலி னாவிவை மூன்று மகன்றோர்
வேதனை தீர்பெரு வீடு விளைந்தார். 4

குற்றத்திரயம் முற்றிற்று.

ஆகச்செய்யுள் 1163.

## 17. பிணித்திரயம்.

நித்தியானந்தசரிதை.

பாடுத னிலையி லாமை பலபல பிதற்ற லாசை
யோடுத றயாவின் றூத லுளந்தெளி வின்மை கோப
நாடுத லச்ச நன்மை நாரியர்ப் பழிச்ச லுய்த்தங்
கூடிடுங் காலை யஞ்சல் வாதத்தின் குணம தாமால். 1

அறிவுட னடக்க மாண்மை யழகுசொல் வண்மை தூய்மை
செறிதரு நன்மை சீர்மை திகழ்தரு வனப்பு மேன்மை
நெறிதிகழ் வாக்குத் தன்னி னிகழ்ந்தமெத் தனவு மற்றும்
பிறிதிலா ஞான மாய்தல் பித்தத்தின் குணம தாமால். 2

சுளிவது வின்மை யீகை துளக்கமி றிருவுண் டாத
லொளிபுக ழுவகை யூக்க முறுவலி யுடைமை மற்றுந்
தெளிவது வுடைய ளுதல் சிலேட்டுமத்தின் குணம தென்று
இனிமொழி யனையாய் கேடின் மறைபல கிளக்கு மன்றே. 3

பிணித்திரயம் முற்றிற்று.

ஆகச்செய்யுள். 1166.

## 18. பந்தத்திரயம்.

சித்தாந்ததீபிகை.

* பெந்த மூன்றுள பேசிற் பகுதியும்
வந்த தெக்கணு வத்தம்வை காரிகந்
தந்த வவ்வியத் தம்முதன் மூன்றினுன்
முந்து மிச்சாதி யாமுடற் பெந்தனம். 1

* ஏதமி றெக்கணு வத்த மெனப்படு
வோது சோதிட்டோ மாதியிற் பெந்தனஞ்
சாத வைகா ரிகந்தனைச் சாற்றிடிற்
‡ பேத பந்தவெஞ் ஞாதியிற் பெந்தனம். 2

‡ பேத பஞ்சயக் கியாதியிற் என்றும் பாடமுண்டு.

பந்தத்திரயம் முற்றிற்று.

ஆகச்செய்யுள் 1168.

குறுந்திரட்டு.

முப்பிணி.

கானம் விரும்ப னிலையின்மை காமக் குரோத லோபங்கண்
ஞான மின்மை தயாவின்மை நல்ல குலநா ரியர்ப்பழித்தன்
மான மின்மை பலபிதற்றன் மரபின் முதல் வாளமரிற்
கூனி யோட லின்னவைதாம் வாத குணமாய்க் கூறுவரால். 329

அறிவ டக்க மாண்மைநெறி யழகு நீர்மை சொல்வண்மை
பிறிதின் ஞானத் தாதரவு பித்த குணமாம் பிறழாமை
பொறைநல் லுவகை புகழீகை பொருந்து மூக்கம் பொறைமதுகை
குறிநற் கருணை சினமின்மை சுபத்தி குணமாய்க் கூறுவரால். 330

மனத்துறு துயர நினைப்பருஞ் சோக
பரிவுறு வாக்க மடையுநர்ப் பொறுமை
மான மாக்கலம் பூணுது மறந்த
விச்சையி னிசைத விருஞ்சின மிகுத்த
வினையவை முதல நினைவரு திறத்த
வாதி பௌதிகஞ் சீத மாமழை
யுருப்பவிர் வேனி லூட்டுவரு கடுங்கா
லிருள்கிழி மின்னுப பெருவிற லசனி
மன்னுயிர்க் குறுகண் ணின்னிபா றருந்த
லாதி யாய வீவருந் திறத்த
வாதி தைவிகம் பேதையா வயினக்
கருக்குழி யழுங்கல் பிறப்பிறும் பூழு
திரைவருந் தீமை வரைவில் பேதைமை
மடங்க லாருயிர் தொடங்கினன் வெளவலி
யாவரும் விழைபாக கோள்வாய் நிரயத்து
வீழ்ந்தன ரொழாஅ வான்கழி துன்ப
மினைய பாலைய துயரிடை விளைநகர
கருங்கைக் கயமைக் களிறுகைத் திருபபுடை
பெரும்படை விரிந்து சூழ்த திருந்தா
நாற்கதிப் பவனி யுலாஅ
யார்ததவிழ் திறமபிற போறறுமதி புரிந்தே.

(இ-ள.) ஆதி-மூன்றினுள் (எ-து) முற்பாட்டிற் சொல்லப்பட்ட துக்கத்திரயங்களில், ஆத்தியான்மிகம் - இரண்டே (எ-து) ஆத்தியான்மிகமாவது சந்தேகமறததேகத்தைப் பற்றிவரும் விதனமும் மனதைப்பற்றி வரும் விதனமுமாக விரண்டு விதமாயிருக்கும் அவையிருக்கும்படி சொல்லில, வளியின் - வாதத்தால், பிததின்-பித்ததததால், விளியாவிளையின் - கெடாத சிலேட்டுமத்தால்,

ஊனுகுதொழுனையின்-சரீரத்தில் மாமிசத்தையழுகிவிழப்பண்ணுங் குட்டவியாதியால், உதகக்கோட்டின் - நீரிழிவால், வெப்பின் - வெதுப்பால்,

சூலையின் - சூலைவியாதியால், மக்களின்-சத்துருக்களான மனிதரால்,

விலங்கின்-விலஙகுச்சாதியால், அலகையின - பசாசுக்களால்,

கள்வரின் - களவுகாண்பவரால், பறவையின் - கொசுகு ஈ முதலாக வுள்ள பறவைகளால், நிருதரின் - அரக்கரால், மைந்தர்மகளிர் மணந்திடைதணப்பின் - விதியால் ஸ்ரீ புமான்கள்கூடி யிடையேபிரிதலால், பேரறம்

வளர்ப்பின் - குருலிங்கசங்கமமாதி தேவதாகாரிய பரிபாலனம் தபசென்னு மிவற்றால், பெருந்திரு நுகர்வின் - சம்பத்தின் மிகுதியால் அடாதனசெய் தனுபவித்தலாலுண்டான, சீரியயாக்கைமாதுயர் - இவைபதினொன்குஞ் சீரி தாகிய சரீரத்தைப்பற்றி வரு மிகக விதனமாம்,

மாசுமனத்துறுதுயரம் - இனிமாசுடைத்தாகிய மனத்தைப்பற்றிவருந் துக்கமாவன, நினைப்படருஞ் சோகம் - பெண்டுகள் மைந்தர் பிரிதலாலும் திரவிய முதலாகக்கூடினவை பிரிதலாலு மாற்றாமையால்வரும் நினைத்தற் கரியசோகமாகிய துக்கம்,அறிவுருவாக்கமனடையுநர்ப் பொறாமை-அறிவுடை யோரை வடிவுடையோரைச் சம்பத்துடையோரைக் கண்டுங்கேட்டு மழுக் காறுற்றமனத்தால் வரும் விதனம், மாணமாக்கலம்பூணாது மறுத்தல்-மான மாகிய பேரணிகலத்திற் கானிவந்தபோ துண்டான விதனம், இசையி னிசைதல்-பஞ்சேந்திரியங்களுக்குப் போகமாகிய பதார்த்தங்களில் வைத்த விச்சையால் வரும் விதனம், இருஞ்சின மிகுதல் - பெரிய சின மிகுதி யால்வரும் விதனம், இனையவை முதலநினைவருந்திறத்த - இவை யைந்து (இந்திரியங்களுக்குப் போகமாகிய பதார்த்தங்கள்) முதலாக நினைத்தற்கரிய வேறுபாடுள்ள பலவுமாம்,

ஆதிபௌதிகம்—ஆதிபௌதிகஞ் சொல்லின், சீதமாமழை—குளி ரால் வருந துக்கம மிகுதியாகிய மழையால் வரும் நடுக்கம், உருப்பவிர் வேனில் - உட்டினமாகிய கோடையால் வருந துக்கம்,

உட்குவருநடுங்கால் - பயத்தைப்பண்ணு மிக்ககாற்றால் வருந் துக்கம்,

இருள் கிழிமின்னு - இருளைக்கெடுக்கு மின்னால் வருந் துக்கம்,

பெருவிறலசனி - மிக்க வலியுடைய விடியால் வருந் துக்கம்,

மன்னுயிர்க்குறுகண்டுன்னியாறருந்தல் - ஒருக்கடல்சூ ழுலகில் பிரா ணிகளொவ்வொன்றைக்கட்டிவைத்து மொவ்வொன்றைக்கொன்று மொவ் வொன்றைவாதைப் படுத்தியும்வைத் தவற்றா லவ்வணமே நுகர்கை, • ஆதியாய வீவருந்திறத்த - இவை யேழுமுதலாக வுள்ள கெடுத்தற்கரிய வேறு பாட்டையுடைய விதனமாம்,

ஆதி தைவிகம்—ஆதிதைவிக மிருக்கும்படிசொல்லில், பேதையர் வயினகருக்குழியுழுங்கல் - மாதாவின் வயிற்றி லந்தக் கருப்பாசயத்தி லிருக்குங்கருப்பவேதனை, பிறப்பிறம்பூது-பிறக்குங்கால் வரும் ஆச்சரிய மாகிய வேதனை, திரை வருந்தீமை - உடம்பு திரையுறு மூப்பால் வரும் விதனம், வரைவில் பேதைமை-அளவில்லாத வஞ்ஞானத்தால் வருஞ் சங் கற்ப வேதனை,

மடங்கலாருயிர் தொடங்கினன்வெளவல் - யமபகவானரியவுயிரைக் கொண்டு போம்பொழுது வரும் மரண வேதனை, யாவரும் விழையாக் கோள்வாய் நிரயத்து வீழ்ந்தனை யெழாஅ வான்கழிதுன்பம் - யாவராலும்

விரும்பப்படாத கோட்பாட்டையுடைத்தாகிய நரகத்திலே யழுந்தி யேறு தற்கரிதாகிய மிக்க துக்கமாகிய வாறும் பிறவுமாம்,

இனையமாலைய - இந்தத் துக்கத்திரயங்களை மாலையாகப் பூண்டு கொண்டு, துயரிடைவினைநகர் - இவ்விதனங்களுக்கிலக்காகிப் பூருவ கன்ம பலம் புசிக்குஞ் சரீரமாகிய நகரியிலே,

கருங்கைக் கயமைக் களிறுகைத்து - பெரியகையையுடைத்தாய குணவீனமான யானையிலே யேறிக்கொண்டு செலுத்தி, இரும்புலப் பெரும்படை விரிந்து சூழ - பரந்த விஷயிய மாகிய பெரிய சதிரம் மிகவுஞ் சூழ,

திருந்தா நாற்கதிப்பவனியுலாவு யார்த்தவிழ் திரம் பிறபோற்றுமறி புரிந்தே - ஒருகாலமுந் திருத்திலாராத வற்பீச மண்டசஞ் சராயுசஞ் சுவேதசமென்று சொல்லப்பட்ட நாற்கதியிலே பவனியாகச் செல்லுகிற தேகாதி தேகாந்தமாகிய வேறுபாடிருக்கும்படி சொல்வன் அவற்றை விரும்பக் கேட்பாயாக (எ-று).

இது மூவகைத்துக்கமான தேகத்தைத் துக்கத்திரயமென்றுஞ் சொல்லியது.

துக்கத்திரயம் முற்றிற்று.

ஆகச்செய்யுள் 11௯.



## 20. ஏடணைத்திரயம்.



தத்துவார்த்தநிகரம்.

* செறிய வேடணை மூன்றையுஞ் செப்பிடி
னறையு மெப்பொரு ளுமர்த்த வேடணை
பொறியுஞ் சுற்ற மெலாம்புத்தி ரேடணை
முறைசங் கற்ப மெலாமுல கேடணை. 1

ஏடணைத் திறத்திற் பட்டா ரியாவரிப் பிறப்புத் தீர்வா
ரோடுமக் கடலி னுள்ளே கிடந்ததெவ் வுலகுந் தானு
நீடுமக் கடலை நேரே நிமலனை ராசகிய மென்னும்
வீடடைப் புணையி னல்லாற் பிறகிடப் படுவ தோதான். 2

## 22. வேதனாத்திரயம்.



மூலசித்தி.

* ஏற்றுவே தனைகண் மூன்று மிகழ்ச்சியோ டின்பத் துன்பஞ்
சாற்றுமே தனையா மென்னச் சமைந்தவிம் மூன்றி லின்பந்
தோற்றுமோர் துயரின் சாந்தஞ் சுகமென மருள லாலே
மேற்றிக ழின்ப மாகா வேதனை யாகு மன்றே. 1

சித்தாந்ததீபிகை.

* அகந்தையு மமதையு மாகு மூலமாய்த்
திகழ்ந்துள பகுதியுஞ் செய்யு முபயது
மிகழ்ந்துள பாச முப்பத்து மூன்றென
மகிழ்ந்துள மறையொடா கமம மைந்ததால். 2

வேதனாத்திரயம் முற்றிற்று.

ஆகசெய்யுள் 1177.



## 23. பூதவியற்பஞ்சவிம்சதி.



தத்துவதீபிகை

* செவியாதி பதந மாதி திகழூயவான் வளிதீ நீர்மண்
புவியாதி யடைவே வாக்கா திகள்புகல் வசன மாதி
யவியாத மனாதி யந்தம் பகுதியைந் தவனை மோரிற்
புவிபாதி யியல்பை யைந்தும புமா னுருப போத மேகாண். 1

பூதவியற்பஞ்சவிம்சதி முற்றிற்று.

ஆகசெய்யுள் 1178.



## 24. புறநிலைப்பஞ்சவிம்சதி.



வீட்டுநெறி.

என்பொடு தோனரம் பிறைச்சி மயிரெனப
பொன்படு பூமி பொருந்திய கூறே. 1
மூத்திரஞ் சுக்கில மூளை யொடுநிணம்
வேர்த்தெழு சோரியு நீரின் கூறே. 2

பசியே சோம்பு நித்திரை மறவி
வசிதரு மைதுன மங்கியின் வகையே. 3
ஓங்க லோட † முரைந்த விருத்தல்
வாங்க லென்றிவை வாயுவின் கூறே. 4

† விரைதத னடத்தல் என்றும் பாடமுண்டு.

குரோத முலோப மிலச்சை பயமொடு
நிரோதமின் மோக நீள்விசும் பாமே. 5

தத்துவதீபிகை.

* மண்ணதனி னென்பொடுதோ னாம்பி னுரசி மயிரென
வைந் தப்பதனி னுவர்நீ ரூனா, பண்ணியபக் கிலஞ்சோரி நிண
மைத் தங்கி பசிதாக நித்திரைமை துனம ராயா, நண்ணியகாற்
றுரைபோங்க னடத்த னிற்ற லலந்திகழ விருத்தலென லைந்தாம்
வானிற், கண்றுபயங் கதமிலசசை புலோபமாசை கருநடப்பிற்
புறநிலையா மைமையர் தன்மே. 6

புறநிலைப்பஞ்சவிம்சதி முற்றிறு.

ஆகசெய்யுள் 1184.



## 25. உண்ணிலைப்பஞ்சவிம்சதி.



சித்தாந்ததீபிகை.

* செவியாதி வாக்காதி தானம் பத்திற் றிகழ்ாத்த வசன
முதல் விடயம் பத்தும், பவமாமத் தானத்தி லுணர்ந்து பண்ணும்
பகர்ஞான கருமவிந் திரியம் பத்துங், துவமாகச் சிந்தித்தாய்ந்
தீதுணிந்து துரிசறவே செய்யுமன முதலா நான்கு, மவையாரு
மவனுடனுள் ளையைந் தன்றி யறைநூல சூக்கமா மையைந் துங்
கேள். 1

உண்ணிலைப்பஞ்சவிம்சதி முற்றிற்று.

ஆகசெய்யுள் 1185.



## 26. தூலபஞ்சவிம்சதி.



நித்தியானந்ததீபிகை

* திகழ்த்திபவை யைந்திலெழு மும்மைய யாகுந் திடம்
விடய காணதா னத்தால் வேறாய், பிருத்தசெவி வாக்காதி தானம்
பத்து மிளிர்வதன மூல மத்தைத் தான மைமந்தாம், வகுத்தமண்
ணின் கூறதுவா நரப்பெ லும்பு பரிக்கசைதோ லெனவைந்து மப்
பின் கூறு, நிகழ்த்துதிர சுக்கிலமூ ருவர்நீர் மூளை நிணமெனுமை
யைந்துந்தா னேநீர தூலம். 1

தூலபஞ்சவிம்சதி முற்றிற்று.

ஆகச்செய்யுள் 1186.

## 27. சூக்கபரபஞ்சவிம்சதி.



சந்தானந்ததீபிகை

* சத்தாதி வசனாதி விடயம் பத்துந் தாங்கி வாயுவெ
டா காய மூன்றி, னாய்த்தாய கூறதிவை பொருமைவைந்து முறைத்
தவிவை யையைந்து முணரிற் சூக்கம், வைத்தாய ஞானவிந்திரிய
மைந்தும் வருகருமேந் திரிய மைந்தும் வாயுப் பத்துந், சித்தாந்
மெனநிகழுங் கரணந் தேர்வான் றிகழ்பரவை யைந்தமெனத்
தெளிக வையா. 1

சூக்கபரபஞ்சவிம்சதி முற்றிற்று.

ஆகச்செய்யுள் 1187.

## 28. மறையியற்பஞ்சவிம்சதி.



சனற்குமாரம்

* ஆகா சாதி பூதங்க ளைந்தும் பஞ்சேந் திரியமும்
போகாப் பத்து விடயமும் போத காண நான்குடனு
மேகா திபத்தி மன்றனு மிருபத் தஞ்சாந் தன்னிலொப
சாகா லங்க ளில்லாதான் றனையீச னென்பா னே. 1

மறையியற்பஞ்சவிம்சதி முற்றிற்று.

ஆகச்செய்யுள் 1188.

## தத்துவதீபிகை.

* ஆறாறு தத்துவமா மவற்றைக் கூறி னசுத்தமொடு மிச்சிர முஞ் சுத்த மென்னக், கூறுகிற் புவிமுதலாப் புருடனீறாக் குறித்த விரு பத்தைந்து மசுத்த மாகும், வேறாகக் கலைநியதி கால மாயை வித்தையிரா கம்மிவைமிச சிரம மாகும், பேறாய வித்தை சிவன் சத்தி யீசன் பெருகுசதா சிவஞ்சுத்த மெனவைந் தாமே. 2

## மெய்ம்மொழி.

செப்பிடுந் தத்து வங்கள் சிவன்முத லவனி யந்த
முப்பதோ டாறு நாம மொழிந்தவிவ் வடைவி னுமேல
யொப்புடை யுதயம் பேத முருபகா ரியங்க ளெல்லா
மிப்படி யிருக்கு மென்றே யெடுத்தினி தியம்ப லுற்றாம். 3

எரியது சேர்வித் தாங்கே யிருஞ்சிவஞ் சேர்ந்த தெல்லாந்
திரியவும் பிறவா தாகுஞ் செகமெலாஞ் சென்ற டங்கி
விரியுமவ் விடம்வே றாக வேண்டிடு மதுப ரமாயை
தெரிவுறு நல்லோ ரத்தைச் சிவத்தின்றத் துவம தென்பார்.

முந்தித்தான் சிவதத் வத்தின் முழுதலற்ப விகார
சந்தித்த திபாது செப்பிற் சத்திதத் துவம தாகு
முந்தித்தான் ஞான சத்தி யொக்கவே கிரியா சத்தி
சந்தித்த விடத்திற் செய்த சதாசிவ தத்து வங்காண். 5

அற்பமா ஞான சத்தி † யதின்மிக்க கிரியை தன்னி
னுற்பவச் செயலை யீச தத்துவ மெனவு ரைப்ப
ரற்பமாக் கிரியா சத்தி யதற்குமேன் மிக்க ஞானத்
துற்பவ மாகும் வித்யா தத்துவ முரைக்கி னன்றே. 6

† யகமிகக் என்றும் பாடமுண்டு.

சித்திரித் துலகம் பண்ணச் சிவாதிதத் துவத்து நித்த
வித்திறத் திச்சை யாதி சத்திக ளேற்றத் தாழ்வை
வித்தரித் துரைத்த வற்றின் வியாபார பேத மான
சுத்தவிவ் வைந்துஞ் சொல்லிற் றோற்றமுற் பிற்பா டின்றே.

சுத்தமா மாயை தன்பாற் றோற்றிய பேதஞ் சொன்னோ
மத்தமா மாயை தன்பான் மற்றுள தத்து வங்கே
ளத்தனை யிரண்டோ மாயை யன்றுகா ணவத்தை பேத
மெத்தன்மை தர்ப்ப ணத்தி னிருபுறம் போலு மன்றே. 8

ஏகந்தா னாகித் தோன்றா தெங்குமுன் டனித்த மன்று
போகங்கள் பிறப்பிக் கின்ற புவனகா ரணம தாகு
மாகந்தோ யுயிர்கட் கெல்லா மவ்வவர் வினைக்குத் தக்க
மோகங்கள் பிறக்கப் பண்ணு மோகினி யென்னு மாயை. 9

மூலத்தி னின்றுங் கால மூன்றுமே யுருவ மாகி
மேலத்தான் கால சத்தி யாவையு மாகத் தோன்றிக்
காலத்தின் வசத்தி னாலே கழித்தவிவ் வகில மென்றே
சீலத்தி னாலே பத்தைச செப்புவர் கால மென்றே. 10

கனைந்தரு மாயை ‡ யென்றுங் காலதத் துவத்தின் பின்னே
யனந்தரந் தோன்றி யாமொன் றாகிலு நியமஞ் செய்தங்
கினங்கொளு நியம மேதன் வடிவமா யிருக்கு மென்று
மனைநிகழ் நல்லோ ரத்தை மதித்தனர் நியதி யென்றே. 11

‡ யென்னும் என்றும் பாடமுண்டு.

யார்ந்துள மாயை யின்றும் பகர்ந்தவந் நியதிப் பின்பா
யடைந்துள மலத்தி னாலே யறிவிலா புமானுக் கத்தைக்
கடந்ததோ ரிடத்தை நீக்கிக் கத்திரு சத்தி காட்டி
யுடன்றிகழ் வாக்கு மித்தை யுரைத்தனர் கலைய தென்றே.

பின்கலை பிறந்த தேனும் பேசிய நியதி கால
முன்கலை யாம்பு மாற்மேக மொழிந்திடின் வினியோ கத்தி
னன்கலை யறிவி னாலே நாலில மநத மாகத்
தன்செயல் யாவுஞ் செய்யுஞ் சகலதத் துவங்க ளென்றே. •

தூண்டிய வழியி னாலே தொழில்விட யங்க ளான்மா
காண்டகு நிமித்த மாகக் கலையது பெற்ற வித்தை
யீண்டிய மலத்தை நீக்கி யாவையுந் தரிசிப் பிக்க
வேண்டுநற் கரண மாகும் வித்தையென் றறிக வின்றே. 14

தெரிந்தவிவ் விடயத் தேலே சேதனன் றனக்கு நேயம்
பரிந்துமுன் பண்ணு மித்தைய பகர்ந்தன ராக மென்றே
விரிந்தவவ் விடயஞ் செய்யில் விதரா கரையுங் கண்டோம்
புரிந்திடும் புத்தி யாமேற் புறம்பதி னுள்ளா மன்றே. 15

ஞானசூரியன்.

* அறைதரு முப்பத் தாறி னசுத்தமா யிருபத் தைந்து
நெறிதரத் தெரிய முன்னே நிகழ்த்தினே னின்ற வற்றிற்
செறிதருஞ் சுத்த மைந்துந் திகழுமிச் சிரம மாறு
மறிவுறக் கொடுக்க நக்கிப் கானுமா றருளி டாயே. 16

* சுத்தமாம் பரமா பாவநல் வியோமஞ் சொல்லிய சிவமதா மதனி, னுய்த்தெழுந் துருத்தல் சத்தியா முருத்த வுணர்வுணருதல்சதா சிவமா, மத்தகு முணர்வ திதமென்றீச னகமெனுமிடமதே வித்தை, மெய்த்தகு முணர்வின் விளம்புமைந் திவைதா மிச்சிர மத்தையுந் தோய்ந்தாய். 17

* † இதமகம் பிறந்த விடத்தினவ் வியத்த மிருண்முதற் பகுதியா மாயை, யதினெழுஞ் சலன மாபெழுங் கால மகிலமீனெனுமதா நியதி, ‡ விதமுறு மதனை யாய்விடங் கலையாம் விரித்தவை புணாதல்விச் சைபதா, முதிசெய்த விடயத் தன்பதா மிராக § முண்டிடும் பரிசுமேற் சுத்தம். 18

† இதமக மிறந்த என்றும், ‡ விதமுற வதனை யென்றும், § மூண்டிடும் என்றும் பாடமுண்டு.

சடுத்திரி முற்றிற்று.

ஆகச்செய்யுள் 1212.

## 31. தொண்ணூற்றாறு தத்துவம்.

மெய்ஞ்ஞானசரிதை.

* பூத மைந்து முடலிரண்டிர் கோச மைந்தும் பூதாங்கிர மைந்துமட பாவ மாறும, வாத மைந்தோ டைந்தும்வரு கரணம் பனுன் கவைவிடயம் பதினொன்று மலங்கண் மூன்று, மேதம் வந்த குணமூன்று மியல்பி லாத வேடணைக ளவைமூன்று மவத்தையைந்தும், போதம வந்த வினைவுணர்ந்தோ ரென்று மாகப் பேசிடுவர் பெரியோர் தொண்ணூற் றாறென்றே.

சிவஞானநிலயம்.

பூதங்க ளானாரைந்தும பொருளிரபத் தைந்தும் புலனைந்தும் பொறியைந்துங் கன்மிகமோ ரைந்து, மேதஞ்சேர் கோசமைந்து மவத்தை யைந்து மினநாடி யீரைந்தும் வாயுப பத்துங், கோதண்டக் கரணங்க ணான்குமல மூன்றுங் குணமூன்றுங் ‡ கணமூன்று மேடணைகண் மூன்றும், போதங்கொ ளுடம்பிரண்டும் வினையிரண்டும் போதுணருந் தானுமெனப பிறழ்தொண்ணூற் றுறென்றே.

‡ பிணி என்றும் பாடமுண்டு.

சமயாசாரம்.

எறித்திடுந் தூல சூக்கும பரமா விசைந்தமுப் பஞ்சவிஞ் சதியு,மறைத்திடு மலமுக் குணங்குயர் பந்த மல்குமே டணையென் மூ வைந்துஞ், செறித்திடு மிராகங் கலைகால நியதி திகழ்விச்சை யென்றுள வைந்து,நெறிப்படு மிந்தக் கேத்திரத் தனுமா நிகழ்த் தினர் தொண்ணூற் றறென்றே. 3

தேவாரம்.

† போக்கமே மிக்கு நின்று புழுமிடை முடைகொள் யாக்கை
தொக்குநின் றிவர்க டொண்ணூற் றறுவருந் துக்கஞ் செய்ய
மிக்குநின் றவர்கள் செய்யும் வேதனைக் கலந்து போனேன்
செக்கர்போ றிகழு மேனித் திருக்கொண்டச் சரத்து ளானே. 4

† போக்கமாய் நின்ற பொல்லாப் என்றும் பாடமுண்டு.

திருமந்திரம்

முப்பது மூப்பது முப்பத் தறுவருஞ்
செப்ப மதிலுடைக் கோயிலுள் வாழ்பவர்
செப்ப மதிலுடைக் கோயிற் சிதைந்தபின்
ஒப்ப வனைவரு மோட்டெடுத் தாரே. 5

தொண்ணூற்றுறுதத்துவம் முற்றிற்று.

ஆகச்செய்யுள் 1217.

# 32. பல்வகைத்தத்துவம்.

தத்துவக்கிகை.

இன்ன மோதுவா பாறதெட் டொன்று மிசைத்த வைம்ப தோ டொன்றத னியல்பு,மன்னு மெட்டதெட் டிரண்டதின் மரபு மதித்த நூற்றொரு பத்திரு வகையுஞ், சொன்ன தொன்றுசொற் சதமொடை யாறுந் தொகுத்த நூற்றுமுப் பத்தோர்தத் துவமு, மென்ன வேயிவை முதற்பல மொழிவ ரிசைத்த பல்வகைத் திவ ற்றையு மறிவாய். 1

* காரி யத்தினிற் பொறிபுலன் விடயங் கரண பூதநான் காற தின் பரிசு, மேரி யற்படு‡ காரணத் தவிச்சை யியற்கை யைந்தொ ழி லிடமதைத் ததுவுஞ், சாரு நற்பரஞ் சத்தியைந் துறுபேர் தா னு மைந்தெனச் சமைந்தவை யைந்து, மாரி யற்பட வாறதெட் டொன்று மறிவர் மற்றவ ரறிஞரென் பவரே. 2

‡ காரண பூத வியற்கை யுந்தொழி என்றும் பாடமுண்டு.

திருச்சந்தவிருத்தம்.

ஐந்து மைந்து மைந்து மாகி யல்ல வற்று ளாயுமா
யைந்து மூன்று மொன்று மாகி நின்ற வாதி தேவனே
யைந்து மைந்து மைந்து மாகி யம்பரத் தணைந்து நின்
றைந்து மைந்து மாய நின்னை யாவர் காண வல்லரே. 3

தேவாரம்.

பிரியாத குணமுயிர்கட் கருளேசா டஞ்சாய்ப் பிரிவுடைய குணம்பேசிற் பத்தே தோன்றிப், விரியாத குணமொருகா றென்கே யென்பர் விரிவிலாக் குணநாட்டத் தாறே யென்பர், தெரிவாய † தொழிலைந்துஞ் சமிதை, யைந்தாய் கதியைந்தும் பதமைந்துஞ் சொரிவி றாக, மெரியாத தாமரைமே லியங்கி னாரு மிடைமருதார் மேவிய வீச னாரே. 4

† குணமைந்துஞ் என்றும் பாடமுண்டு.

தத்துவதீபிகை.

* ஆறு மாறக்கமு மவைவையா றெடுகோ ளாகு மாறுமைம் பாசமைங் கரண, மேறு மேதுவாந் திபலவினை யிரண்டு மெறிதரு முக்குண மெழுபிறப் பதுவும், பாறு மாறுகா மாதியோ ரெட்டும் பன்னு சத்தசத் திருமைநுண் பூத, மாறொ டாகிய வுறுபதுந் தெரிந்தங் கறிய வல்லவ ரறிஞரென் பவரே. 5

திருச்சந்தவிருத்தம்.

ஆறு மாறு மாறு மாபோ ரைந்து மைந்து மைந்துமா
யேறுசீ ரிரண்டு மூன்று மேழு மாறு மெட்டுமாய்
வேறு வேறு ஞான மாகி மெய்யி னோடு பொய்யுமா
யூறொ டோசை யாய வைந்து மாய வாய மாயனே. 6

தேவாரம்.

புகையெட்டும் போகெட்டும் புலன்களெட்டும் பூதலங்க ளவையெட்டும் பொழில்களெட்டுங், கலையெட்டுங் காப்பெட்டுங் காட்சியெட்டுங் கழற்சேவடி யடைந்தார் களைகணெட்டு, நகையெட்டு நாளெட்டு நன்மையெட்டு நலஞ்செறிந்தார் மனத்தகத்து மலர்களெட்டுந், திசையெட்டுந் தெரிப்பரிதாம் முன்னைப்பின்னைத் திருவாரூர் கோயிலாக் கொண்டாரே. 7

தத்துவதீபிகை.

* சிவமுதலைந் திராகாதி யைந்துஞ் சேருந் திகழ்நிவிர்த்தி முதலைந்து மூர்த்த மூன்று, மவமுறுமுப் பிணிதுயரஞ் சங்கங் குற்ற மாகியபா சங்களுநற் சுடர்தான் மூன்றுந், தவமுறமுற் சாற்றியிடுந் தொண்ணூற் றாறுந் தொகுத்துரைத்த நூற்றிருபத் தொன்ப துந்தா, னவமதற வாய்ந்த வற்றைக் கடந்த வுண்மை யறிந்தவர்க ளமலரென வறிக வைபா. 8

### யோகசித்தி.

* கோடி தத்துவ மெண்ணினுங் கோதிலா
நீடு சிற்பர நின்றது மற்றவை
யோட சித்தசத் தாய்விடு முண்மையாற்
பீடு றப்பல பேசல்பித் தல்லவோ. 4

### நித்தியபோதம்

* கண்ணினிற் றிமிர காசக கறையினை விலங்கு மிந்து
வெண்ணிடைப் பலவ தான வியல்பென வெல்லையின் றூடக்
கண்ணினிற் கடவு ளேக மாயினும் பலவ தாகக்
கண்ணிடத் தகுமே ஞான ‡ நயனம திலாமை யாலே. 5

‡ நலமது விலாமை யென்றும் பாடமுண்டு.

### மூலசித்தி.

* தத்துவம் பலவெனச் சாற்று வாரவர்
சித்தர்க ளெனுமிடம் பேச வேண்டுமோ
வத்துவின் வடிவல தின்றி நின்றபி
னெத்தனை † யிதுவல தென்னும் பன்மையோ. 6

† யிதுவென வென்னும் என்றும் பாடமுண்டு.

### போதாமிர்தம்.

* பன்னுவர் பலபல தத்து வங்களை
மன்னிய பரமுண ராத மாந்தர்கள்
தன்னிலை தனையுணர் கின்ற போதினி
லெண்ணினு மிதுவென வுரைய லானதோ. 7

* கோளுமக் கிளைநரை குமிழி கொள்ளுதான்
வேலையிற் பிறிதென விளம்ப லானதோ
சாலுதத் துவம்பல சாற்று மாயினு
மூலநற் பரமதே முடிவி லுள்ளதே. 8

### சிவப்பிரகாசதரிசனம்

* ஒன்ற தென்றிட லாவது மொன்றற
நின்ற தத்துவ நின்மல போதமே
பின்ற தோன்றுள தென்கை பெருமறை
யென்று வேத மியம்பிய தல்லவோ. 9

### தத்துவதீபிகை.

ஆதலான் மைந்த வறைந்ததத் துவங்க ளறிவிலா மையினுள வதுபோற், பேதமாய்த் தோன்றும் பெருமயல் கழியப் பேசினத் தனைபிறி தில்லை, வாதிலா ஞான மயமதா மொழியா மதுரசிற் கனசுகக் கடலா, மேதுமோ ரவத்தை களுறிலா வுண்மை யிலங்குதத் துவமென வறிக. 10

தத்துவத்துணிவு முற்றிற்று.

ஆகச்செய்யுள் 1237.

# 9. அவத்தைப்படலம்.



## 1. தாதுகதாவத்தை.



விருவிளக்கம்

சகலதத் துவமெனச் சாற்றிய திசனை
யகமுறத் தெளிவிலா தமையி லென்பது
சிகரிறத் துவத்தினிச் சயமுங் கேட்டனன்
புகலுமற் றவத்தையின் பரிசும் பூரணா. 1

தத்துவசுத்தி.

சத்துக்கு விகார மென்றுஞ் சம்பவித் திடாது நிற்கப்
புத்தித்த மென்ன முன்னே புகன்றன விகற்ப மெல்லா
மொத்துற்ற கடற்ற ரங்க மேவாதமபோல் விரிவொ டுக்கம்
பெத்தித்த பகுதி யின்றன் குணங்கள்காண் பேசி னன்றே.

மனுதி யைந்திணு வரணமுறு நட்டபமாம் வடிவா
விணுத சிதறுமா யிருந்தன வீங்கிவை யிரண்டு
நமுமூ ணுங்ய நான்கிமேனு டொன்றெனு மிவற்றை
விணவு ருவகை விளம்புவாய் விதிமுறை விரித்தே. 3

அஞ்செ னப்படுங் காணமு தான்மகன் னிதியால்
விஞ்சு சைதன வத்தென விளங்கிடு மிதுமு
னைஞ்சு மூன்றுமா யமைந்ததா துக்களைப் பற்றித்
துஞ்சி டாவகை நின்றபோ துணர்சியாஞ் சொல்லின். 4

* உறக்க மாயிநங் குருகித்தா லொழிக்குகா வீதே
யிறைசசி சூழ்ந்ணை மிறநதிடிற் சுழுத்திய மென்க
துறக்கி னொண்புமச் சைகளினைத் துரியமாஞ் சோர்வான்
மறக்கின் மற்றுள விரண்டையு மருவுபா லதீதம். 5

தாதுகதாவத்தை முற்றிற்று.

ஆகசெய்யுள் 1212.



குருந்திரட்டு.

சுத்ததா மான்ம சன்னிதி யதனிற் சைதன்யம் போலவே சரிக்குஞ்
சித்தமா திகளா மட்டதா துக்கள் செறிவுறு பொழுதது நனவா [த்தி
மித்திலே சொரிதோல் விடிற்கன வாகு மிறைச்சிசேர் நிணம்விடிற் சுழு
யத்திமச் சைகளை விடிலது துரிய மடையவே விடும்பொழு ததீதம். 1



# 2. குணாவத்தை.



மெய்ம்மொழி.

போதமும் போதா போதம் போதமில் லாமை மூன்றும்
பேதமு மபேத மாய பிரகிரு தியின்கு ணங்காண்
போதமாஞ் சத்து வந்தா னிராசதம் போதா போதஞ்
சாதமே யபோதஞ் சொல்லிற் றாமத மாகு மன்றே. 1

திரிந்திடுந் திரிகு ணத்தாற் றிரிவித மாம வத்தை
விரிந்தநான் கென்பர் மீண்டுஞ் சொப்பனந் தனைமி குத்துத்
தெரிந்தசாக் கிரமு மத்தைச் சேர்ந்தசொப் பனமு மத்தில்
விரிந்தநற் சுழுத்தி யென்று மேவிடுந் துரிய மன்றே. 2

விடமதுக் கடங்கிப் போதம் விரிந்திடு மமுதுக் காங்கே
சடமுடை யுறக்க மாய தாமதத் தறிவ டங்கிச்
சடமதிற் சத்து வந்தான் சனித்தபி னெழுந்தி ருக்கு
மிடமுடைக் கனவி ரண்டு மிராசதத் துதிக்கு மன்றே. 3

ஒன்றோடொன் றொன்று மாறி யுறுகுணம் போல வத்தை
சென்றோடொன் றொன்று மாறித் திரிந்திடு மென்று கொண்ணீ
யென்றுமூன் றொன்றோ டொன்றின் யாதுமிக் கதுவ தென்று
நின்றவுட் குணமு ணர்ந்தா னீங்குநித் திரைய தன்றே. 4

மத்தவவ் விபத்திற் றொன்று மாயநித் திரையா யுள்ள
சத்திதான் புத்தி யாதி சமத்தமு மடர்த்த போழ்தே
யொத்தநற் சைத னன்றா னொடுங்கினு னென்னத் தோன்று
மத்தன்மை யன்றி மற்றோ ரவத்தைக ளவனுக் குண்டோ. 5

குணாவத்தை முற்றிற்று.

ஆகச்செய்யுள் 1247.



குறுந்திரட்டு

சத்துவ முணர்ச்சியாந் தமஞ்சு ழுத்தியா
பத்திமக் குணமதாம் வாத னைக்களு
முத்திறக் குணங்களான் மூன்ற வத்தையு
நித்தலுஞ் சக்கர நெறியின் மேவுமால். 1

—:—|—:—

# 3. அவத்தாந்தராவத்தை.



மெய்ஞ்ஞானவிளக்கம்.

ஒன்றினா லாக விம்மூன் றுரைத்தவிப் பரிசே தென்னிற்
சென்றசொப் பனமி குத்துச் சுழுத்தியாய்த் தெரிந்த மூன்றி
னின்றொரு பொருணற் காட்சி யாபாச நினைவ யர்த்த
லென்றுநா லொன்றி னாகி யிசைந்தன வென்று கொண்ணீ. 1

ஏற்றியசாக் கிரமாதி மூன்று மொன்றி னனவாதி நான்கவத்தை யிசைத்தல் கூறிற்,சாற்றலுறு ஞாதமொடு நினைவுஞ் ஞாதந் தசைமூன்றங் கூறுஞான மெனநான் காகும்,போற்றியவிக் கனாநன விப் பரிசே கொள்க பொருந்தியநற் † சுழுத்தியுருப் பசையொ டுக்க, மாற்றியமுத் தசையுறுஞா னந்தா னென்ன வறைந்தனரித் திறம்வகுத்தங் கறிஞ ரையா. 2

† சுழுத்தியுறுப் பசைவோ டுக்க என்றும் பாடமுண்டு.

ஆதலின்முத் தசையினினு மனாதா யொன்று யவிநாசி யாய மல மதுவாய் நின்ற, போதமதைத் தசையினிலும் பொருந்த நோக்கிப் புரையறுதல் போந்தபொருள் புரைய தென்ன, வோதிய முத் தசையினினு மவத்தை யாகி யொடுங்கி டத்தும் விரிந்திடத்து மொருமைத் தாகிப், பேதமினற் றுரியமெனும் பிரமந் தன்னைப் பெற்றவத்தை யென்றுமறியார் பெருமை யோரே. 3

அவத்தாந்தராவத்தை முற்றிற்று.

ஆகச்செய்யுள் 1250.



குறுந்திரட்டு.

நனவொடு கனவு சுழுத்தியே துரிய நான்கெனச் சொலப்படு மவத்தை சொனவவை யொன்றி லவத்தைநான் கெல்லாப் புலன்களும் வழங்குரு னனவா, நனவதப் பரிசை நினைவது கனவா மறப்பது நனவினிற் சுழுத்தி யினமறத் தானாய்ப் பிறிதில்லை நினையா திருப்பது நனவினிற் றுரியம். 1

கனவினை நனவு போலவே காண்டல் கனவினி னனவதாங் கனவிற்
கனவது கண்டு மறத்தலா னதையும் பிறிதையுங் கண்டிடா திருத்தல்
கனவினிற் சுழுத்தி மூன்றவத் தையையுங் காண்பதோர் கரியுள தென்ன
வனுமதித் திடுதல் கனவினிற் றுரிய மாகுமென் றறைந்தன ரறிஞர். 2

# 4. ஆதாரகரணகதாவத்தை.



## மெய்ம்மொழி.

இந்துத்தா னத்தங் குற்றுச் சாக்கிர மியாவுஞ் செய்கை
மந்தித்துக் கண்டந் தன்னின் மதித்தல்சொப் பனஞ்சு ழுத்தி
கந்துற்ற விருத யத்திற் கனவுகண் டறியா தானை
யந்தித்தா தாரம் புக்கங் கறிவற றுரிய மன்றே. 1

## மூலசித்தி.

மூன்று விதமாஞ் சாக்கி ரத்தே ஞானந் தரும மபாவமே
† தோன்றுங் கண்ணிற் கழுத்ததனி னாபி தனிலிங் கொத்தனுமே.

† தோன்றுங்கழுத் திருதய நாபி தனிலிங கத்தினுமே என்றும் பாடமுண்டு.

இருபத் தைந்து தத்துவமும் வாயுப் பத்துஞ் சாக்கிரமே
யொருபத் துடைய விடமும் வாயு மனதி கனவாமே. 3

இரும்பு நெருப்பு வாங்கியபி னின்ற படிபோற் கனவாகுந்
தரும்பல் வாயு வளவுமானந் தன்னை விடாமை சுழுத்தியே. 4

வாயுச் சுழுனை தனிலடங்கி மனமங் கொழிந்த துரியமே
யாயு மிடந்தோ றொழியாதே யடங்க வடக்க லதீதமே. 5

## குறுந்திரட்டு.

### அவத்தாந்தராவத்தை.

சுழுத்தியி னனவு பிறிதையுந் தனையுந் தோன்றிடா திருந்துள விடமாஞ்
சுழுத்தியிற் கனவு தோன்றிடா திருந்த விருளது தோன்றிய விடமாஞ்
சுழுத்தியிற் சுழுத்தி தோன்றிய வறிவா லவ்விரு டுஞ்சிய விடமாஞ்
சுழுத்தியிற் றுரிய மவ்வறி விறந்த துளக்கமில் சொல்லரும் பாழாம். 3

துரியத்தி னனவ துலகெலா முணர்ந்த துளக்கமில் லேகமா முணர்வாந், துரியத்திற் கனவ திதமொழிந் தகத்தே தோன்றிய தன்னைநோக் குதலாந், துரியத்திற் சுழுத்தி யிதமக மியாவுந் தோன்றிடாச் சொல்லரும் பாழாந், துரியத்திற் றுரியஞ் சொல்லரும் பாழ்போய்ச் சொரூபமா யாவையுந் தோன்றல். 4



ஞானாமிர்தம்.

கால்கொடுத் திருகை யூட்டி வாழிய
வெந்நிற் றண்டென் விடங்கத் தின்னியற்
பழுக்கழி நிரைத்துச் சிரைக்கயி றசைத்து
மயிர்த்தோல் வேய்ந்து சுவர்த்தசை நிறீஇ
யைம்புலச் சாளரத் தரும்பெறன் மாடத்
தும்பர் மணிக்குடச் சென்னிப் பொங்கிய
கூந்தற் பதாகை நான்குநிலை தழீஇய
வாங்கினி தமர்திற னறையி னொன்று
சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தி துரியம்
பிருகுடி நாப்பண் ணொருபெருந் தந்தர
மருபத் தாதி வலஞ்சுழி யுந்தி
பொருநாள் கந்துலி யும்பர் வன்முறை
செவிமெய் கண்வாய் மூக்கெனப் பெயரிய
வாயின் மிலேச்சர் சாரணர் தூதர்
ஆகு மாகதர் புரோகித ரென்று
மேதகு புத்தீந் திரியுந் தீதறு
வாக்கொடு பதங்கை பாயு ருபத்தமொண்
ணிவுளி மறவரும் யானை யிரரும்
திகிரி தூண்டிய தறுக ணாளரும்
வன்கண் மள்ளருந் தந்திரத் தலைவரு
மென்கரு மேந்திபத் திறனு மெஞ்சிய
ஓசை பரிச முருவ மிரதங்
கந்த முரைநடை கொடைபோக் கின்பமெண்
விடயப் பல்பரி சனமு மிடைபாப்
பிராண பான வுதான வியான
சமான நாக கூர்ம கிருகர
தேவ தத்த தனஞ்சய னென்ற
விரைந் தூறிர் சுற்றமு நீதி
சிந்தித் தாய்ந்து துணிந்து செயப்படு
மந்தக் கரண வமைச்சருந் தந்த
முறையுளி வழாது துறைதோ றீண்டிச்
சாதுரங் கத்து நீதி யாகிப்

பேறத் தாணி சீர்பெறத் துன்னி
வீசுவ வீசி விரும்புவ விரும்பி
மாசில் காட்சி மன்ன னீங்கிப்
பல்பரி வாரமும் விள்ளாச் சுற்றமுந்
தந்திரம் புணர்ந்த மந்திர மாக்களும்
பலர்புக லறியா வவைபுகு மாங்கி
னினைந்தாய்ந்து துணிந்துசெயன் மணந்தினி துணர்ந்து
நனவெனக் கனவி னன்னடை வழாஅ
துரைத்தனன் சொப்பனத் தகத்தினி திறந்து
மந்திரத் தலைவனும் வன்கடும் பதிபனு
மந்திர பூமி மருங்கு போகிச்
சிந்தை மாத்திரங் கனவலி னனவிற்
றந்துறை சுழுத்தி யின்றே மந்திரத்
தலைவற் றணந்து விலைவரம் பில்லாச்
சிங்கஞ் சுமந்த வைம்மே ரமளிப்
பள்ளி மண்டபத் தானுந் தனைது
திகிரி யுருண்ட பெருவனப் பேய்ப்ப
வுறுதிச் சுற்றத் தெறிவளி யெடுப்ப
வேற்ற மிழிவு சீற்ற மாற்ற
விழிச்சல் பழிச்ச லின்பத் துன்ப
மொழித்தனன் றுரியத் தழித்தினி ததீதத்
தொருவகை யெங்கணு மாகி யிருளிரி
சுடர்த்தொழிற் சாக்கிரத் தாங்க ணுங்கி
னிடைத்தகை தெரிதனிற் றெரியு மாறே.

(இ-ள்) கால்—அறையின் (எ-று) இரண்டுகாலையும் நாட்டி யிரண்டு கையையும் வைத்து முதுகிலே வாழப்பட்ட வீணைதண்டென்னு முகட்டிலே யினிய வியல்பாகிய பழுவெலும்புகளென்னுங் கழியைச் சுவராக நிரைத்து நரம்பென்னுங் கயிற்றினாற் கட்டப்பட்டு இந்தக் கழிச்சுவரிலே மாங்கிசமென்னு மண்ணாலேமேவி மயிரையுடைத்தாகிய தோலாலே வேயப்பட்டு இந்திரியமைந்தாகிய சாளரங்களையுடைய விந்தப்பெறுதற்கரிய மாடத்தின்மேலே பூரணப்பொற்குடமாகிய தலையையும்பெற்று மிக்கிருக்கப்படாநின்ற கூந்தற்கொடியையும் நான்கு நிலையையும் பொருந்திய அவ்வீடத்தினிதாக இந்தத் தேகத்துக்கரசனாகிய ஆன்மா வர்த்திக்கு முறைமையைச் சொல்லின்,

ஆன்ற—உம்பர் (எ-து) புருவமத்தியிலே நின்றபோது விசாலமுடைத்தாகிய சாக்கிராவத்தையென்றும் ஒப்பில்லாத பெரியகழுத்தடியிலேநின்றபோது சொப்பனாவத்தையென்றும் நெஞ்சடியிலே நின்றபோது சுழுத்தியவத்தையென்றும் வலமாகச் சுழித்திருக்கின்ற நாபித்தானத்திற்கு மேலே நாலங்குலம் கீழே நாலங்குலம் ஆக வெட்டங்குலத்து நின்றபோது துரியாவத்தையென்றும் சொல்லப்படும்.

வரன்முறை—புத்தீந்தியமும் (எ-து) சாக்கிராவத்தை தொடங்கிவருமுறைமையாவது செவியிலே நின்று போகங்கொள்ளும் வாயின்மிலேச்சராகிய அநாரியமெய்காப்பாரும் மெய்யிலே நின்று போகங்கொள்ளுஞ் சாரணராகிய ஒற்றருங் கண்ணிலேநின்று போகங்கொள்ளுந் தூதுபோவாரும் வாயிலேநின்று போகங்கொள்ளும் சூதமாகதராகிய எத்தாளரும் மூக்கிலேநின்று போகங்கொள்ளும் புரோகிதருமென்று சொல்லப்பட்ட மேம்பாடு தமக்கிருக்கப்படாநின்ற ஞானேந்திரியவர்க்கமும்,

நீதறு—திறனும் (எ-து) குற்றமற்ற வாக்கிலேநின்று போகங்கொள்ளுங் குதிரைச்சேவகரும் காலிலேநின்று போகங்கொள்ளும் யானைமேல் யுத்தவீரரும் கையிலே நின்று போகங்கொள்ளுந் தேர்செலுத்தும் பயமிலராகிய தேர்மேல் யுத்தவீரரும் பாயுருவிலேநின்று போகங்கொள்ளும் வன்கண்ணரான காலாட்களும் உபத்தத்திலேநின்று போகங்கொள்ளுஞ் சேனாதிபதியரும் என்று சொல்லப்பட்ட கன்மேந்திரியவர்க்கமும்,

எஞ்சிய—பரிசனமும் (எ-து) இவ்விந்திரியங்களுடனே கூடிய சத்த பரிச ரூப ரச கந்த வசன கமன தான விசர்க்கானந்தம் என்று சொல்லப்பட்ட விடயமாகிய பல பரிவாரத்தாரும்,

இடையா—சுற்றமும் (எ-து) இதயத்தில் இந்திரநீலநிறத்தையுடைய இடை பிங்கலை சுழுமுனையிற் போக்குவரவுசெய்யுங் கெடாதபிராணவாயுவும் குதத்தில் இந்திரகோப நிறத்தையுடைத்தாகி மலசலங்களைப் பிரிக்கும் அபானவாயுவும் நாபித்தானத்திலே மின்னொளியின் நிறத்தையுடைத்தாகி அக்கரங்களைப் பிரிக்கும் உதானவாயுவும் உடல் முழுவதும் வியாபித்து நின்று பானிறத்தையுடைத்தாகித் தேகத்தைச் சுழித்தல் முதலிய தொழில்களைச் செய்யும் வியானவாயுவும் கண்டத்திற் காயாமலர் நிறத்தையுடைத்தாகி யன்னசாரத்தை நாடிதோறுஞ் செலுத்துஞ் சமானவாயுவும் இளஞாயிற்றினிறத்தையுடைத்தாகி நகைமுதலிய தொழில்களைப் புறம்பே செய்விக்கு நாகவாயுவும் குருந்தமலர் நிறத்தையுடைத்தாகிக் கண்ணையிமைப்பிக்குங் கூர்மவாயுவும் மஞ்சணிறத்தையுடைத்தாகித் தும்மலை யுண்டுபண்ணுவிக்குங் கிருகரவாயுவும் பளிங்குநிறத்தையுடைத்தாகிக் கொட்டாவியைச் செய்விக்குந் தேவதத்தவாயுவும் நீலாஞ்சன நிறத்தையுடைத்தாகித் தேகத்தை வீங்கவெடிக்கச் செய்யுந் தனஞ்சயவாயுவும் என்று சொல்லப்பட்ட தசவாயுக்களாகிய உறுதிச்சுற்றமும்,

நீதி—அமைச்சரும் (எ-து) முறைமையிலே ஒன்றைச் சித்தஞ்சிந்தித்துப் புத்திவிசாரித்து அகங்காரந் துணிந்து மனம் அத்தைச்செய்வித்து வருகிற அந்தக்கரண சதுஷ்டயமான மந்திரிகளும்,

தந்தம்—மன்னன் (எ-து) தந்த முறைமைகளிலே வழுவாதே துறைதோறுங்கூடிச் சதுரங்கத்து அசேதனமான கருவிகளைச் சேதனமாகக் கூறினாற்போலப் பெரிய அத்தாணி மண்டபமாகிய அந்தப் புருவமத்தியிலே சிறப்பாகக் குற்றமற்ற காட்சியையுடைய ஆன்மாவாகிய மன்னவன் பொருந்தி ஞானேந்திரியங்களால் அறிவனவற்றை யறிந்து கன்மேந்திரியங்களாலே செய்வனவற்றைச் செய்தது,

நீங்கி—உரைத்தனன் (எ-து) இந்தச் சாக்கிராவத்தையிலே இந்திரியம்பத்தையும் நீங்கித் தன்மாத்திரைகள் வசனாதிகளாகிய பரிவாரங்கள் பத்தும் நீங்காத வாயுக்கள் பத்தாகிய சுற்றத்தாரும் விடயத்திற் கூடும் அந்தக்கரண சதுட்டயங்களாகிய மந்திரிகளும் மற்றைத் தத்துவங்களாகிய பலரும் புகுவதன்றி இங்ஙனஞ்சொன்ன இருபத்து நான்கு தத்துவங்களாகிய விவர்களை புகப்பட்ட கண்டத்தான மாகிய வாங்கிலே சித்தஞ்சிந்தித்துப் புத்தியாராய்ந்து அகங்காரந்துணிந்துமனம் அத்தைச்செய்வித்து இத்தனையுங்கூடி யினிதாக அறிந்து நனவென்றுமயங்கிச் சொப்பனவத்தையிற் கண்டவாறு இந்தச் சாக்கிராவத்தையி லொன்றுந் தப்பாமற் சொன்னான்,

சொப்பனத்து—இன்றே (எ-து) சொப்பனத்தானத்தில் இருபத்திரண்டுகருவிகளைநிறுத்தித் தான் இனிதாக நீங்கி மந்திரத்தலைவனாகிய சித்தமும் உறுதிச் சுற்றத்தானாகிய பிராணவாயுவும் சுழுத்தியவத்தைத்தானமாகிய இதயத்திடத்திலே புகுந்து சிந்தித்தலுடைய சித்தமாத்திரமாய் மயங்குதலாலே சுழுத்தியவத்தையிற்கண்டபடி சாக்கிராவத்தையிற் சொல்லுந்தன்மையில்லை,

மந்திரம்—துரியத்து (எ-து) சுழுத்தியவத்தையிலே மந்திரத்தலைவனாகிய சித்தத்தை யொழித்துப் பெறும்விலை யளவிடுதற்கரிதாய சிங்காசனத்து மயிர்ச்சேணம் செம்பஞ்சுமெத்தை வெண்படாந்தூவி பயிர்ப்பின்மயிற்பீலி மீப்பாய் என்று சொல்லும் பஞ்சசயனமாகிய படுக்கையிற் பள்ளிமண்டபத்தே பள்ளிகொள்ளுகிற காலத்தும் அரசனுடைய சக்கரஞ்சென்ற பெரிய அழகுபோல உறுதிச்சுற்றமான தசவாயுக்களில் விளங்குகின்ற பிராணவாயு வியங்க உயர்ச்சியுடையேனென்றும் தாழ்வுபட்டேனென்றும் கோபமுடையேனென்றும் பொறையுடையேனென்றும என்னை வைதார் வாழ்த்தினர் என்றும் சுகதுக்கமுடையேனென்றும் அறியுமிவையொழித்து நாபித்தானத்திலே துரியாவத்தையிலே நின்றான்,

அழித்து—ஆகி (எ-து) துரியத்தானத்தில் பிராணவாயு நிற்க அந்தவவத்தையையொழித்து மூலத்தி லினிதான அதோமுக துரியாதீதத்திலே ஒருபடித்தாகிய ஆணவமல மறைப்பச் சர்வ வியாபியாகியிருப்பன்,

# 6. சங்க்ஷேபாவத்தை.



## மூலசித்தி.

புருடன் பகுதி விடயமுணல் சாக்கிரம தாவதே
புருடன் விடய முண்பானாய்ப் பாவிப்பதுவே கனவாமே. 1

பகுதி பிராண னுடனிற்கை சுழுத்தி யாவதே
பகுதி பிராணன் றனிலடங்கத் தன்னையறிகை துரியமே. 2

துரியாதீத நிரஞ்சனமே சொல்லும் பேத மில்லதுவே
துரியாதீதஞ் சாக்கிரத்தே தெரிய வருதன் ஞானமே. 3

என்று கமங்க ளெடுத்துரைத்த வியற்கையென்ன வெழின்மறைக
ணன்று யிடவித் திறமுரைத்த நபமுமுணர நவிற்றிடுவாம். 4

## போதரத்நாகரம்.

* மருவுறு கரண மெல்லா மருவிட விடய மேலே
பெருமதி சரிக்கு மத்தைப் பேசிடு நனவ தென்ன
வொருவிய விடயந் தன்னை யுய்த்தவா தனையான் முன்போற்
கருதுவா தனையே வேதங் கனவென வறையு மன்றே. 5

* மன்னிய விடயந் தானும் வாதனை தானு மாண்ட
வின்னியல் சுழுத்தி யென்றங் கெழின்மறை யறையு மன்றி
யுன்னிய வவத்தை மூன்று மொதுக்கற வுணர்த லாலே
யன்னிலை யான்மா விற்கங் கவையில வென்ற தன்றே. 6

* அன்ன மூன்றுமான் மாவினிற் கற்பித
மென்னு மூட மிறந்திட மாமறை
பன்னு நற்பர மான்ம பதத்தினுக்
குன்னு பேர்துரி யம்மென வோதுமால். 7

* பன்னி டிற்பர மான்ம பதத்தினுக்
கன்ன வத்துரி யப்பெய ராம்பத
முன்னி டிற்பொய் யுரைத்தமூன் றும்பொய்யாய்
மன்னு பொய்க்களிற் றின்வர வொத்ததால். 8

* ஆன நான்கு மிறந்தது வேபர
ஞான ரூபம தென்றது நான்மறை
யான வாறர னாகம நீதியு
ஞான நான்கி னதீதம தென்றதே. 9

* நனவொன்றாய்க் கனவதனி னன்கனவு சுழுத்தியென நாடி ரண்டா, யுனாநின்றுங் காரணமிலா திடந்துரிய மொளிர்வதுமே லதீத மென்றுறை, தெனநின்று சமங்களினி லிசைத்ததனை யாரணங்கள் கனவொன் றாக்கிச், சொனவைந்தா மதுநான்கிற் றொகுத்த லிது சமமறையின் றுணிபொன் றேயாம். 10

சங்க்ஷேபாவத்தை முற்றிற்று.

ஆகச்செய்யுள் 1268.



## 7. அநுபவாவத்தை.



### சமயாசாரம்.

உரைத்திடு மவத்தை யைந்து மோங்கனு போக மாகத்
தெரித்திடு நனவிற் கண்டு திகழுமே வயவைக ளன்றாய
கரத்துறு மணிய தென்னக் கருதுறு பொருள்கண் டாளுந்
திருத்துயி பரம தான திகழ்விட மதுவுங் கேளாய். 1

புலம்புலப் படும்புலத்தா னனவினிற் புத்திக் காதற்
றலம்புலப் படும்பகர்ந்த கனவினிற் பயநத வான்மாத்
தலம்புலப் படுஞ்சுழுத்தித் தன்மையி னருஞ்சிவத்தி
னலம்புலப் படுமவத்தை நனவினி னதீத மாமே. 2

### போதாமிர்தம்.

* பொறிபுலன் கரண நனவொடு கனவிற் பொலிந்நவை வெளிப்படு மன்றிச், செறிவுறுஞ் சிவன் றெளிநதிடு நனவிற் றிகழ் சுழுத் தியில்வெளிப் படுமா, லறிவரும் பரம னனவினி னதீதத் தழகுற வெளிப்படு மெனலா, நெறிதருங் குரவன் வெளிப்படி மந்த நேயமா மிடம்விளம் பரிதே. 3

அநுபவாவத்தை முற்றிற்று

ஆகச்செய்யுள் 1271.



# 10. வாக்கியப்பண்ணை.



## 1. வாக்கியவுருக்கம்.



விநாயகர்வணக்கம்

சுருதியா டாக அங்கள் சொல்லிய முறைமை யாலே
தெரிதர வதத்தை யெல்லாந் திகழ்த்திய செய்ய தேவே
விரிதரு வேதத் தூர்சி விளங்குவாக் கியங்க டம்மி
னுரைதரு பொருளை யுநதா னுணர்த்திடே யருள வேண்டும். 1

சுருதி யாதமா வாக்கிய மவாந்தரஞ் சுடருமோங் காரந்தான்
கருதி யாண மோதிடு மசனை யநற் கடவுளரு செழுத்தோடு
திருதி யாகுமட் டாக்கர முதன்மறை செப்பும்வாக் கியமெல்லாஞ்
சரத மாயிட வொருபரம் பொருளையே சாற்றுகின் றனவைபா. 2

ஆதி நாயக வருமறை நாயக வமலநா யகவைந்தாம்
பூத நாயக புவனநா யகவுன்னை புகன்றவாக் கியமெல்லா [வாத
மோது மோர்பொரு ளாம்பரி செங்ஙன மொன்றொன் றொவ்
வேத மாமுல கோதிடு மேகமாம் பெருநல் முறையாமே. 3

நீண்டவாக் கியப்பொருளா மிமல † னென்ற நிகரிலிரு வரு
செழுத்தின் பொருளா மென்று, மாண்டதிரு வெட்டெழுத்தி
னருத்த மென்று மசைவையொ மோங் காரமதன் பயனு மென்றும்,
வேண்டியவா விதங்கள்பல மொழிந்து மாந்தர் வெவ்வே றுபிணங்
கிடுவ ரவற்றிற் கெல்லா, மாண்டமைகே பிணக்கிறந்த பொரு
ளொன் றமா றையமற வடியேனுக் கருள வேண்டும். 4

† னென்று என்றும் பாடமுண்டு.

குறுந்திரட்டு.

அதுநீ யாயினை யென்றவாக வப்பொரு ளனைறயி
னதுவென வுரைதிய பதமபரம் பரனையே காட்டு
மதினீ யெனும்பத மயலறுஞ் சீவனைக் காட்டு
மதிலா ருயெனும் பதமயிக் கத்தினைக் காட்டும். 1

நிமல மாமபர மதுவெ னுமபொரு ணீயெ னும்பொருள் சீவனே
யமல மான விரண்ட யிக்கிய மசிய தப்பொரு ளாவதே. 2
அருமை யாகிய பிரம முன்னிலை யாகு மாருயிர் பின்னிலை
யிருமை யாய விரண்ட யிக்கிய மெய்து மாறெவ னென்னவே. 3

## போதாந்திருகாம்.

ஓங்கிய சுருதியா மலைக ளுச்சியி
லுங்கெழுமா வாக்கிய மாம ருந்துக
டெங்குறு பேதமாஞ் † சிறைகெட் டேகமா
மாங்குறு சராசர மாக்கு மமலமே. 5

† சேண்கெட் என்றும் பாடமுண்டு.

வாக்கியவருக்கம் முற்றிற்று.

ஆகச்செய்யுள் 1276.

---

## திருந்திரட்டு.

உபாதி யால்வரு பேத மேயிவர் பேத மொன்றுறு வுயிரினின
கபாதி யாமுடல் போலி றைக்குள கார ணாதிகள் சாயமே. 4
ஈசன் முற்றறி வாண்மை யாதி யெவைக்கு மேது வியம்புமா
காச கன்னிரு பாதி பாவனை கார ணாதிக ளாவதே. 5
ஆக முன்றிக ழேழு மென்ன றுவமய தத்தி லசுத்தமே
சோக மின்றிய சான்று நானென றுவமய தப்பொருள் சுத்தமே 6
அகில காரண மாதி நானென றற்ப தத்தி லசுத்தமே
சகல காரண சான்று நானென றற்ப தப்பொருள் சுத்தமே. 7
செறிந்த காரண காரி யங்கள் சிதைந்து மேலுறு சித்ததா
யறிந்த வாதனை தானு மற்றதம் வசிய தப்பொரு ளாவதே. 8
அசுத்த மாகிய திருப தத்திலு முக்கி யப்பொரு ளாவதே
விசுத்த மான திலக்கி யப்பொரு ளொன்று சொல்லுவர் விமலரே. 9
பூரண்ட சீவ பரங்க டம்முடன் முக்கி யப்பொரு ளாவதே
யிரண்டில் வேறறு சிற்சொ ரூப மிலக்கி யப்பொரு ளாவதே. 10
வாக்கி யப்பர சீவர் தங்க ளுடம்பி ரண்டு மிலக்கணை
வாக்கி யப்படி நீக்கி ளுமொரு வத்து வேபர வத்துவே. 11

# 2. மாவாக்கியம்.



## போதரத்நாகரம்.

பாங்குறு பரமமாம் பொருளை யேமறை
யோங்கிய வாக்கிய முழுது மோதலி
னுங்கவை தனித்தனி யறைய முன்னநல்
லோங்குமா வாக்கியத் துண்மை கூறுவாம். 1

## சொரூபானந்தசித்தி.

திரமா மருத்தத்தி னுண்மைந்த ராலுந் தீராதி வற்றின் றியா கத்தி னாலே, யுரமான வேதாந்த மாவாக்கி யத்தா லுற்பன்ன மாம்விச்சை யாணிச்ச யத்தாற், பரமான வஞ்ஞான வந்தத்தி லேயப் பரஞான வுபதேச மொன்றாலு மேயிப், புரமா முடம் புக்கு ளேயந்த முத்திப் பொருள்கண்டு வீடெய்து வாரிப் புவிக்கே. 2

## நாராயணமனனம்.

ஆதித் திருநான் மறையின்க ணருநீ யாகின் றாயென்று
போதிக் கின்ற வாக்கியங்க டம்மிற் றோன்றும் பொருளதனை
யோதற் கரிய பரனையுமிங் குயிரா முணர்வொன் றையுமோர்ந்து
பேதிப் பில்லா வகையெழுந்த வறிவு வீடு பெறுமால் 3

---

## குறுந்திரட்டு.

## இலக்கணவாக்கியம்.

ஓரில் விட்டதும் விட்டி டாதது முபய மும்மென வுணர்வுளோர்
தேரி லக்கணை திரிவி தத்தி லிசைப்பர் மற்ற தியம்புவாம். 1

மஞ்சு கூப்பிட லென்றல் போலவும் வடப கீர தி யுள்ளதே
விஞ்சு கோடம தென்றல் போலவும் விட்ட லக்கணை யாவதே. 2

சிவலை நின்றது வெள்ளை போயின தென்று செப்புதல் போலவே
கவலை யின்றி விடாத லக்கணை யென்று நீகொள் கருத்திலே. 3

மேவும் விட்டு விடாத லக்கணை மெய்ம்மை யாதெனி லந்தவித்
தேவ தத்த னெனும்பொ ருட்படி சிந்தை செய்திடு தீரவே. 4

விட்ட லக்கணை தனையும் விட்டு விடாத லக்கணை தனையுநீ
விட்டு விட்டு விடாத லக்கணை யால்விளங்கு விளங்கவே. 5

போது மேவிய தேசம் விட்டொரு புருட னைக்கொளு மாறுபோ
லோது மீருடல் கண்டு விட்டத னுண்மை காண வுரைத்திடே. 6



உருவா முயிரே துயர்பரமென் றுரைக்கப்பட்ட வவர்தாமார்
வெருவா வறிவா விருவர்க்கும் வேறி லாமை யாகுவதென்
னருவா மதுநீ யாகின்று பென்று தரத்தா லறைகின்ற [ரால். 4
திருநான் மறையின் செயலேது தெளிய வெனக்குச் செப்புதி

ஓது கின்றே னிவ்விடத்தி னுயிர்தா னுன்னிற் பிறிதுண்டோ
தீதி னீயே யென்னுமிது தெளிவாய் தெளியி னீயாவா
யாத னானு ரெனவென்னை வினவு நீயா ரொருவனவ
னாதி யாய பரமென்றே யறிதி யைய மில்லைகாண். 5

பொய்யாச் சொல்வலீர் புகல்பொரு ளேது வினவலியான்
மெய்யா முடலிது கோதென விடவேண் டுவதாயி
னெய்யா † வினிரா னாரென வெழூமே தமதொழியக்
கையார் தருநெல் லிக்கனி யெனவென் னுயிர்காட்டீர். 6

† விவனீ யானாரென என்றும் பாடமுண்டு.

மனனா திகள்புல னாதிக ளுடனாய் மகிழ்போழ்துங்
கனவா னதுநிலை யும்மிவை கழியோ தினுமதியி
னினமா யினவுள வாகையு மிலவா கையு மியல்பா
னனவா யறிய விகாரியை நானா மெனநயவாய். 7

அறிவானை யறிகின்ற பொருள்களை யடையாளக்
குறியாகச் சான்றுமா றொருவகையாற் கூறினேம்
பிறிவாகி நிகழ்பேதப் பிணக்கின்றிப் பேணுநர்க்கு
நெறியாகித் தானேயாய் நின்றபடி நிகழ்த்துவமியாம். 8

எல்லாந்தா னறிந்துபா மியாவுக்கு மிறையாகிப்
புல்லாதே யொன்றேநும் பூரணந்தான் புனிதமெனக்
கல்லாதார்க் குணர்வரிய சலேவேத நிலையோது
நல்லானை நவநீத சோரனென நன்கறிவாய். 9

ஆனந்தந் நானென்று மகிலசக மித்தனையுந்
தானந்த மில்லாத்தன் காரியமென் றுன்றனக்கு
மானந்தா னேயென்று மறையின்முடி வறையுமது
கோனந்தன் மகனாகிக் குலவுமவ னெனக்குறியாய். 10

அதுவென்று நீயென்று மறைந்தவரும் பதமிரண்டு
மிதுவொன்றாய் வுறப்பட்ட திப்போதிங் கினியிதனா
லெதுவந்த பயனென்னி னிரண்டாலுந் திரண்டபொருள்
பொதுவின்றி யொன்றாகை பொருண்முடிவு புகலுங்கால். 11

### அஞ்ஞானநிவிர்த்தி.

அவனென்னும் பதத்தினையா ராய்ந்திடத்தி னகிலமெலாம் படைத்தளிக்கு மறிவா னந்த, மிவனென்னும் பதத்தினையு மிசைந்துபார்க்கி னீருலகிற் பிறந்திறக்கு மிவனே யாகு, மவனைநீ யாகியெனு மசிபதந்தா னகண்டசுக போதத்தை யவர்க்குக் காட்டு, மிதனவனென் றிரண்டுபொரு ளுண்டாயொன் றிருந்த படி யெங்ஙனே வியம்பு வாயே. 12

பதப்பொருளை நினைப்பிக்கும் பதங்களெல்லாம் பறியாத மாயையினைப் பறிக்க மாட்டா, பதப்பரிசு வாக்கியத்தின் பொருளைப் பார்த்துப் பாகத்தை விட்டுப்பா சத்தைச் சேர்க்கு, மிதப் பொருடான் வாக்கியத்தான் மன்னித் தோற்றி மெய்ந்நாரு மாயை யினை விரையப் போக்கி, யுதித்தபொரு ளொன்றென்றே யுணர்ந்து விட்டா லொருவர்க்கும் விரோத மொன்றூ டில்லைகாணே. 13

### சொரூபானந்தசித்தி.

அதுவென் றுரைசெய் பொருளா யதினு நீயென் றுரைசெய் பொருளா யிதினு, மதிபண் ணிடவே றதுவா கிடுமவ் வறிவா திகள்கா ரணமன் றிரவிலை, யெதுவொன் றுமிலா தெவை யாவையுமா யிவையன் றிடுகே வலசித் தினையே, யாதுநீ யெனும் வாய் மொழியா மதனை லறியும்படி சொன் னதிவ்வா ரணமே.

தத்துவ மென்ற வார்த்தை யிரண்டிற்கும் பொருள தாகிச
சித்துமெய் யாகி நின்ற திகழ்பர மொன்றாந் தன்மை
தற்பரந் தன்னி னேலே சித்திக்கு மென்ப தேயிங்
கப்படி வாக்கி யத்தி னருத்தமே யாகு மன்றே. 15

மாவாக்கியம் முற்றிற்று.

ஆகச்செய்யுள் 1291.

## 3. அவாந்தர வாக்கியம்.



### சித்தாந்ததீபிகை.

ஓதுமா வாக்கி யத்திற் குதவியா பொருளை கூறுந்
தீதிலா வவாந்த ரங்கள் செப்பிடும் பரிசு தன்னை
நீதியா லுணர்த்த லுற்றே னிமலமா முளத்து மைந்தா
காதலா லதனை யுந்தான் கருத்துறக் கேட்டி டாயே. 1

* நேதி நேதிசெய் திமலவாக் கியத்திரு னிகழ்சக லமு நீக்குப், பேத மாண்டபி னின்றது வெதுவது பிரமமென் றிடு தற்குப், போத கஞ்செய்த விரகுமா வாக்கியப் புரையறு பொரு ளுக்கு, நேதி யாமுறை யுதவியென் றுபநிட நிகழ்த்துத றவி ராதே. 2

## போதாமிர்தம்.

* சத்தியஞா னாநந்தமே பிரம மென்னச் சாற்றியிடும் வாக்கி யத்தின் சதிரி ருலே, சத்தியமும் பிரமத்தி னசத்தைப் போக்கிச் சலியாத ஞான பதஞ் சடத்தைப் போக்கி, யத்திலுள வனந்த பதஞ் சிறுமை தன்னை யாதரத்தோ டகற்றிய பி னநிலா னந்த மித்திலுள துன்பமெனுங் கப்பரந்தா † னேகரசச் சத்தாக விருக் குங் காணே. 3

† ஏகரசசிற்சத்தா என்றும் பாடமுண்டு

* உண்மையினைப் பிறிவினுணர் வுணர்வுமன்று வுணர்வுதனைப் பிறிவி னுண்மை யுண்மை யன்று, திண்மையிற லனந்தத்தை யிவைசே ராதேற் பிறியனவாய்ச் சித்தாகா சத்து மாகா, வுண்மை யிறு லிவைக்கத்தோ டொன்று காதே யுண்மையுணர் வனந் தங்க ளொன்று மாகா, திண்மையினாற் பிரமத்தோ டிவையுஞ் சேர்ந்தாற் றெளிந்தபிர மந்தானு மிவையு மொன்றாம். 4

* இதமனைத்துநற் பிரமநிச்சயமென வெழுந்தவாக் கியத்தாலே
விதமதுற்றிடு பூதபௌதிகாசரா சரவித மனைத்துமபோய்ப்
பதம துற்றமா வாக்கியத் தெழுதரு பழுதறு பொருடனைத்
திதம துற்றிடத் திகழ்த்தலாற் செழுமறை செப்புகின் றதுவையா.

* நீப தாயினை யென்றமா வாக்கிய நிகழ்த்திய படியாலே
போய மாயையும் பூரணபூ ரணாசக போதமா கியவநந்
நேய மோடகம் பிரமமா யினனென நிகழ்தரு பதிபத்தி
யாய வாக்கிய மகண்டவாக் கியப்பொரு ளுதித்தமைத் ததுவையா.

* அந்த விந்தநற் றிவதத் தன்னொடு மமலவாக் கியத்தாலே
யுந்து தேசகா லாதிகள் கழிந்துள வொருவனே யானுற்போன்
முந்து வாக்கியத் திருபத முக்கிய கழிந்திலக் கியமாய
வந்த மாதியி லமலமாம் பிரமமென் றறைந்தகா ரணமெல்லாம் 7

அவாந்தரவாக்கியம் முற்றிற்று.

ஆகசெய்யுள் 1295.



## 5. அசபை.



### வினாவிளக்கம்.

ஓதிப வோங்கா ரத்தி னுண்மையாம் பொருளின் றன்மை
பேதம தில்லா வாறு பேதையேற் கருளி னுப்போ
லாதியா மறைக ளோது மசபையாம் வாக்கி யத்தி
னீதியாம் பொருண்மை தானு நிட்டலனே யருள வேண்டும். 1

### மூலசித்தி.

* அஞ்ச மென்றெழும் வாக்கிய † மெவருரு மொளிருமப் பரமத்தின், றன்சு தநதரத் தெழுதலி னசபைநற் சயமபுவென் றிடலாகுந், துஞ்ச லின்றிமூ வேழதா யிரத்தறு நூறுகாற் ‡ சுவப மேவ, வஞ்ச மின்றிநின் றெழுதரு மதுதனை யுணரவீ டெனும் வேதம் 2

† மெய்யரு ளொளிரு என்றும பாடமுண்டு.
‡ சுவாத, மெஞ்ச லின்றியன் என்றும் பாடமுண்டு.

### தத்துவசாரம்.

* அசபை தன்னினின் றெழுதரு முபூவது நிலைபெறு மதி ன்மாளு, மிசையு மவ்வியல் பதுகொடு வுணாவலி யோகரு முயல் கின்ற,ரசைவி லாதுட னிலைபெற வென்பது வசபையினினைவன்று, நிசம தாமுயிர் பரத்தினை கத்துவ நிகழ்த்துத னினைவையா.

### பூரணப்பிரகாசம்

* அகம தென்றிடு முறையினி னுடன்முத லனுகிய தடை யின்றி, மிகுப ரம்பர மாயிடு மிகுபர மதுவக மெனுமத்தாற்,றகவ தோன்றிய பரவுடன் மிடைதரு தகைவற வுளமெய்யா, மிகப ரந்திக ழிதமக மறவெறு மெல்லையறு சிவமாமால். 4

* ஆத லாலகம் பிரமமா வதுவென வசபைநன் மொழியாலே
பேத மின்றிமா வாக்கிய மவாந்தர மிலகிய பரணவத்தாற்
பேத மொன்றற வுரைசெய்த பரிசெனப் பெரியவா தரத்தோடே
யோது கின்றது வுவமைய தறமிகு பொளிபுப நிடந்தானே. 5

அசபை முற்றிற்று.

ஆகச்செய்யுள் 1313.



## 6. ஸ்ரீ பஞ்சாக்கரம்.

### வினாவிளக்கம்.

சுருதி யீறுக டெளிந்துரை செய்தவத் தூயவாக் கியமெல்லாங்,
கருது கின்றவப் பொருளதொன் றும்வகை கருணையா லளித்தாற்
போன், மருவு கின்றவச் சுருதியீ றுகம மதித்தவஞ் செழுத்தா
கும், பொருவில் வாக்கியம் புகன்றிடும் பரிசையும் புலையனேற்
கருளெந்தாய். 1

### ஆனந்தபோதம்.

* அஞ்செழுத்தி னருட்பொருளை யறியக் கூறி றைக்கைமனம்
பிராணாதி யனைத்தின் வேறாய்த், துஞ்சலற வவற்றையுணர் நானே
யந்தச் சொல்லிறந்த சுகச்சிவமாய் முடிந்த தென்கை, யெஞ்ச
விலா மறையனந்த கோடி யாலு மிசைத்திடுதற் கரும்பொருளஞ்
செழுத்தா லிங்ஙன், வஞ்சமற வுணர்த்தியநின் மொழியி னுண்மை
பதித்தவர்தம் பெருமையினை மதிக்க லாமோ. 2

* அகமென்ற வரும்பதத்தின் பொருடா னாக்கை யிந்திரிய
மனப்புத்தி யுபிராங் காரந், தகவொன்று திரளன்றி யுணர்ந்து
வேறுந் தன்மையுடைச் சிவனேய சாற்று மற்றை, யிகதின்று
சிவமெனுநற் பதமும் பஞ்சத் தொழில்செய்தோர் தொழிலில்லா
விமல வீசன், றெகவந்து சிவாயவெனும் பதமி ரண்டுஞ் சொன்ன
வுபா திகள்கழிந்தாற் சுகசிற் சத்தே. 3

* இப்பரிசு சிவசிவ ரென்னும் வண்ண மிரண்டெனவங்
கிடைக்கிடந்த வுபாதி நீக்கி, மெய்ப்பரிசு கரையிறந்து விளங்கா
நின்ற விமலசதா சிவத்தையே மெய்ம்மை காட்டு, மொப்பரிய
வஞ்செழுத்தை யிவண மெய்யே யுணர்ந்தவரோர் சிவமாகு
ருணரா தேயுஞ், செப்புறுவோ ரவர்களுமித் திருநா மத்தின் றேச
தனுற் றீயபவஞ் செறுவர் காணே. 4

* ஐந்தெனத்தான் மாபூத மைந்தா மூர்த்த மைந்தொழி
லைம் புலனவத்தை யைந்து மெல்லா, மைந்தெனத்தான் புரிந்திடுமவ்
வகையி னனு மமருலகம் விளையால மான்மா வீச, னைந்தெனத்
தான் றமைந்தன்பர்க் கருளி னாலே யங்கையினா மலகமெனத்
தன்னைக் காண, வைந்தெழுத்தா லுணர்த்தினனா முய்யும் வண்ண
மரிபிரமர் களப்பரிய வருணை யையன். 5

ஸ்ரீ பஞ்சாக்கரம் முற்றிற்று.

ஆநச்செப்புள் 1318.

நானா னென்னு நாம வாசக
மூனா காதொழி யாதுணர்ந்திடி
னானா னேனென்முன் னாய தில்லையோ
மானா தீத மபத்துவ மாயதோ. 7

இதுவன் றன்றென வென்னு பாமொழி
யதிரோன் றன்று சமைந்த பார்வையி
னெதுமுன் கண்டது வென்க ரந்தது
பொதுவொன் றுண்டுகொல் போத மன்றியே. 8

எல்லா மென்றெழு மென்னை யுங்கெட
வல்லா ராரவர் வாதிலா தவ
ரெல்லா மென்பது மென்கெட் டே பால
வில்லா தாதலி னேக மாயதே. 9

வாக்கியநிரூப்பியம் முற்றிற்று.

ஆகச்செய்யுள் 1332.



## 9. சீவபரவேறு.



சிறுவிளக்கம்.

காண்டவாக் கியங்க ளானு மிதுவெனக் கருதொ ணாதா
யீண்டிய பரமன் சீவ னிருவர்தம் பேத மென்ற
மாண்டவப் பொருளை யின்னம் வகைப்பட வடிய னேனுங்
காண்டகை யறியும் வண்ண மழகுற வருள வேண்டும். 1

பேரொளிவிளக்கம்

கடலுலகின் செயலொருவன் காணா னிறருங் காணுங்க ளிருண்டொருவன் காணா னைகு, முடலுதவும் விளைப்பயனை யொருவன் வேண்டு மொருவனவை வேண்டுமவற் குதவா நிற்கும், விடலரிய விருவினைக்கே யொருவன் மேவு மேவாமை யாலொருவன் மேலா மானா, னுடலையுறு முயிரனைத்து நடத்துகின்ற நாதன் கா ணென்றதனை நாட்டி னானே. 2

இருப ருந்துள வுடன்பிறந் துடன்வளர்ந் திசைவுகூர் வனவந்த, விருப ருந்துமா யொருபெருந் திருமர மியைந்தன வொருபோதே, வொருப ருந்தந்த வோங்கிய திருமரத் துறுபய னுவந[illegible]ண்ணு, மொருப ருந்தொன் று முண்டல்செல் லாதது ணொளியு[illegible] லொளியாமே. 3

## சோதுபானந்தசித்தி.

* இந்த வுடம்புறை சிவ பரங்க ளெனப்படு மன்னமிரண்
டந்த விரண்டினு மொன்று வினைப்பய னங்கு நுகர்ந்திடுமாங்
கொந்த மறும்பா மொன்று புணராது சொலப்படு பேதமில்லான்
வந்த கடத்தி னகப்படு பேத மெனப்படு மாயையினால். 4

* ஏயபே ருலகில் வினைப்பய னுகர்ந்திங் கிதயமே மருவு வா ரிருவர், சாயையா தபமா கின்றனர் சீவர் சங்கர ரென்றிடத் தகு வா, மேயுமா றறவே யுண்பவன் சீவ னூட்டுவான் சிவனிவர் தம க்கிங், காயபே தந்தா னுபாதியால் வந்த தல்லது வபேதமே யாகும். 5

### சூத்திரம்.

காரியங் காசினி யாதி யேரிய
லீசன் கர்த்தா விவற்கிது போக
மாதல் செல்லா தகன்றுயர் தநுக
தாமே நுகர்தல் செல்லா தாகு
தென்னை செய்த தென்னி னன்றே
கொன்னே செய்யான் றன்னே ரில்லோன
பாரி சேட மதனிற் பரனுக்
கேரியல் பரன்பசு வென்றறி யினிதே.

(இ-ள்.) காரியம்—ஆதி (எ-து) பிருதிவி முதலாக காசமிறுக்கத் தேகாதிப் பிரபஞ்சஞ் செயலாயிருந்தன,

ஏரியல்—செல்லாது (எ-து) அழகிய வியல்பையுடைய பரமசிவன் கர்த்தாவாதலால் இவனுக்கிவை போகமாகப் பொருந்தமாட்டா,

அகன்று—செல்லாது (எ-து) விரிந்துயர்ந்த காரியமாயிருக்கிற தத்துவங்கள் சடமாதலின் தாமே தமக்குப் போகமாகமாட்டா,

ஆனது—என்னின் (எ-து) அமையாது இந்தத் தத்துவங்களைச் செய்யவேண்டுவானே னென்பாயாகில்,

அன்றே—இல்லோன் (எ-து) ஐயோ இந்த நெடும் பிழையை என்றும் விருதாவிலே செய்யான் றனக்குவமையில்லாத பரமசிவன்,

பாரிசேடம்—பரனுக்கு (எ-து) மூவரிருந்த விடத்திலே ஒரு பொருளைச சிலர் இது யார் பொருளென வினவினால் நாங்களிருவரு மறியோம் என்று சொன்னால் ஒழிந்தவன் அறிந்தானென் தன்மையாகிய பாரிசேட அநுமானத்தால் இச்செயல்கள் பசு பாச பதி யென்னும் மூன்றனுள்ளைத் துப் பதிக்குஞ் சடமாகிய பிரபஞ்சத்திற்கு மியையாமையாற் பரனாகிய ஆன்மா விற்காகவேண்டும்,

எரியல்—இனிதே (எ-து) இவ்விடத்தி லழகிய வியல்பையுடைய பரனென்றது ஆன்மாவையென் றினிதாக வறிவாயாக (எ-று). 6

மூலசித்தி.

* அலகிலறி வலதின்மை யறிந்தகமென் பானீச
னுலகமுழு தறியாதோ ருடனறினென் பான்சிவன். 7

மெய்ம்மொழி.

சுத்தநற் சிவனுஞ் சிவன் சுபாவமைச் தனந்தா னைத்து
மொத்ததன் மாயா பேதந் துயரநீங் கிநுயிர்க்குத்
தெத்தஞ்செய் சததி காட்டத் தீக்கில்லைக் குண்டத் தீக்குண்
டத்தன்மை பான்மாந தானு மமலநற் சிவமு மன்றே. 8

சிவபரவேறு முற்றிற்று.

ஆகச்செய்யுள் 1310.

## 2. சீவவிலக்கணம்.

ஞானவிநோதம்

* காரணங்கள் சேட்டைசெயக் கரணியாய்க் கனநனவி
னாரணங்கொள் சுபூத்திதனி னறிவின்றி யறநதான்போம்
மரணந்தான் பிறப்பின்றி மனனுதி † குறைவின்றித்
திரணந்தான் றனைமொழியாத் திகழறியு சிவன்றானே. 1

† குணமின்றி யென்றும் பாடமுண்டு

போதாமிர்தம்.

நித்தன் கேவல னிரவய னிர்க்குண னவிகாரி
சுத்தன் வியாபக னருண்மயன் றொழிலில்ன மிகுநாதன
சத்த னசலையன் சைதன னுத்தம னமலதத்தொன் றுமம
பெத்தனத தான்மா பிரபுவ னபோபாபசுப பதியன்றே. 2

குறுந்திரட்டு.

சீவபரவேறு.

கடந்தனோ ருடம்புபுலன் கரணங்கள் முதற்பகுதி
யுடம்பெனவே யுடையவன்று னுயிரெனவோ தப்படுவா
னடங்கவறிந் தகிலமுத லாககியளித் தழிதலெல்லா
விடங்களினு மொழிவறவே நிறைந்திறையா மவனீசன். 364

சட்டெனத் தெளிந்தான் சர்ப்ப மிரச்சுவிற் காணு தாம்போற்
கட்டின பாசம் விட்டாற் கண்டிலன் பெத்தம் பின்பு
சிட்டநற் சுபாவ மேயாஞ் சிவன்முத் தன்றே கத்தை
விட்டபின் பரம முத்தன் வியோமம்போற் கடநா சத்தில். 3

மூடிமுன் னிருந்த தீப மூடிய கும்பம் போனு
னீடிய வொளியா யெங்கு நிகழ்ந்ததங் கான்மாத் தானு
மூடிமுன் மறைந்தி ருந்த மும்மலம் விட்ட போது
நீடுதற் சொரூப மேயாய் நிகழ்ந்துதான் விளங்கு மன்றே. 4

பெத்தித்த சாம நீலம் பெத்தம்விட் டாற்ப ளிங்கு
சுத்தத்தன் னுருவ மாய சோதியாய் விளங்கு மாபோற்
பெத்தித்த புரியட் டத்தின் பெத்தத்தை விட்ட போது
சுத்தத்த ஞன்மாத் தானுஞ் † சோதியாய் விளங்கு மன்றே. 5

† சுபாவமாய என்றும் பாடமுண்டு.

சத்தெனும் பிரதா னத்தைச் சார்ந்தக ளிப்பை கொண்டு
புத்திமுன் சேட்டித் தத்தாற் போகங்கள் புசிக்கு மாகேள்
சத்தத்தின் சன்னி திக்கே தற்சொரு பதையா நின்ற
புத்திதன் சேட்டை யெல்லாம் புருட னங் குதாசீ னன்காண். 6

செறிதரு கதிரோன் முன்கண் சேட்டையாங் கான்மா வின்முன், வறிதரு புத்தி சேட்டை யத்தினுற் சேட்டை பெற்று, வெறிதரு மாங்கா ரத்தின் விகாரத்தான் மனஞ்சேட் டித்துப், பொறிகண்மேற் புறக்கண் செல்லப் பொறிகள்சேட் டித்த வன்றே. 7

சத்தமுன் விடயந் தன்னைச் சமத்தவிந் திரியம் பற்று
மெத்தென மனமும் வாங்கி விகாரத்திற் கூட வைக்கு
மத்தரு மவைய னைத்து மாங்காரம் வாங்கிக் கொண்டு
புத்தியி னிடத்தே சேர்க்கும் புத்திநிச் சயிக்கு மன்றே. 8

இப்படிப் புத்தி தன்னி னேய்ந்தவிவ் விடய மெல்லாந்
தப்பிலாச் சைத ஞன்மாச் சன்னிதி யால்வி ளங்கு
மெப்படி விகார மின்றி யிரவிபூ தலத்தி னுள்ள
வப்படி பொருள்க ளொல்லா மறிவிக்கு மங்ங னையா. 9

பொறிகளால் விடய மெல்லாம் புக்கவை புத்தி தன்னிற்
செறிவுறப் பிரகா சிக்குஞ் சேதனன் சன்னி திக்கே
யறிவுறு மயிக்கிய ஞான மனைத்துமென் செயல் தென்கை
வெறியுறு பிறவிக் கெல்லாம் வித்ததா மந்த ஞானம். 10

ஓப்பொடு பசியுந் தாக முற்சாகஞ் சுகதுக் கங்க
டாற்பரி யங்கள் போகந் தன்மமு மதன்மந் தானு
நீப்பரி தாய புத்தி நிகழ்குண மாகு மத்தை
யாத்மாவின் குணமே யென்ப ரயிக்கியபா வகத்தி னோரே. 11

* இசைத்தவப் புத்தி தன்னின் விருத்திய திரண்ட தாகு
மொசித்தக மொன்று காணு மொன்றித மென்று செல்லு
மிசைத்தவை யிரண்டுங் கண்டு தானவி காரி யோனாய்
நசித்தலும் பிறப்பு மில்லா நாயக னான்மா வன்றே. 12

மெய்ம்மொழி.

அத்தலத் துணரா துள்ள மறப்பனை ஞானி யென்பார்
பத்துநா ருயிரம்பே ரசேதனம் பகரக் கேளாய்
தத்துவ ஞானி யென்பார் தற்சொரூ பத்தை நாளும்
புத்தியின் மேலே காணும் புண்ணிய ரெண்ணி னன்றே. 13

சேர்ந்தவவ் வுருவம் போலாய்த் தெளிதரு பளிங்க தென்ன
வார்ந்தநோய் திரைகண் மூப்பு மருந்துய ரனைத்துங் கொண்டு
சார்ந்தவச் சரீரத் தாலே சரீரிபோற் றோன்று கின்ற
னோர்ந்திடி னொன்று மில்லா வுண்மைச்சை தனத்த னன்றே. 14

சீவவிலக்கணம் முற்றிற்று.

ஆகச்செய்யுள் 1354.



குறுந்திரட்டு.

சீவவிலக்கணம்.

சேர்ந்தமா யையினு ணீர்தோறுந் தோன்றுந் தினகர னென்னவே சீவன், பிறிந்துசீ வனெனப் பெயர்பெறு மவன்று னுண்மையிற் பிரமமே யன்றே, யுறைந்தநீர் சலிக்க வுதயனன் சலித்த லொக்குமே யவன் சலிப் புண்மை, யறிந்தபோ தந்த மாயைபோய்ச் சலியா வமலநற் பிரமமே யாமால். 365



# 3. பரவிலக்கணம்.

——∘∘✻∘∘——

## ஞானாமிர்தம்.

படியடி யடங்காக் கடிகமழ் தாமரைக்
கட்காண் கடவுளொ டத்துறை யமலனு
மென்றே வியல்பின னிறையென விரங்கும்
விண்ணோ ரண்ணலை வினவின் மண்முதன்
முப்பது முதலா மூவிரண் டோவா
வொப்பி றத்துவ மொருவிய திப்பிய
னுழிவற நிறைந்த வொருவன் புரைதீர்
வண்ண மில்லி யமலன் கண்முதற்
புலனொடு புணரா னிணையிலி யானென்
பகத்தின் வாராப் பிறப்பிலி தனகனெ
நாம மில்லோ னாத னநாமயன்
கால காலன் கணக்கிலி கடையு
மூலமு நடுவு முனிந்தோன் மேலோ
னுகுல மில்லி யகோப னமோக
னபய னபங்க னகம்ப னசஞ்சல
னித்தன் முத்தன் சுத்தன் சுதந்தரன்
பெத்தமும் வீடு மகன்றோன் சித்தபோ
டின்பமுந் துன்பமு மிகந்தோன் யாவும்
புலமின் றுணர்ந்த புனிதன் கலமெனத்
தனித்தலு மளித்தலுந் தடிந்தோன் றற்பரன்
றுரியமுங் கடந்த தூயோன் பெருமைக்
கண்ட மறுத்தர வனுவண் டத்துட
னின்று நுணங்கிய தண்டாச் சித்தி
யுரைதரு புணரிக் கரைக்கறை யம்பிக்
காட்சி முதலிய வளவையு மளவறச்
சேட்பட வகன்றனன் சிவனெனச்
சூழ்ச்சியி னிறைந்தோர் துணிந்தனர் நெடிதே.

(இ-ள.) படியடி—வினவின் (எ-து) பூமியிலடங்காத பாதத்திணையும் நறுநாற்றமுடைய தாமரைப்பூவை யொத்த காணுங்கண்ணிணையுமுடைய விஷ்ணுவும் அத்தாமரைப்பூவினிடத்திருக்கும் பிரமனும் அறிதற்கரிய இயல்புடையான் பதியென்று சாத்திரங்களிற் சொல்லப்பட்ட தேவர்களுக்குக் கர்த்தாவாகிய பரமேசுவரனை யாராயில்,

மண் முதல்—சீர்த்தி (எ-து) நித்தியராய உவமையில்லாத பிருதிவி தத்துவ முதலாக வுள்ள முப்பத்தாறிற்கும் அப்பாலாயிருக்கும் அதிசய முடையோன், சருவவியாபகமாய் நிறைந்த ஏகன், குற்றமற்ற பொன்மை நீலாதி வன்னங்களில் ஒருநிறமு மில்லாதோன், நிர்மலனாயிருப்போன், கண்முதலாகிய விந்திரியங்களோடு கூடியிராதவன், தனக் குவமையில்லாதோன், யானென்னு மகங்காரத்தாலே வருவது சன்மமாதலால் அவ்வகங்காரமில்லாமையாற் சனன மில்லாதோன், தனக்கெனவொரு பெயரில்லாதோன், சர்வகர்த்தாவாயிருப்போன், நோயில்லாதோன், திரிகாலங்களுக்குங் காலமாயிருப்போன், அளவுபடாதோன், முதனடுமுடிவில்லாதோன், மகானாயிருப்போன், கலக்கமில்லாதோன், கோபமில்லாதோன், மோகமில்லாதோன், பயமில்லாதோன், கண்டிக்கப்படாதோன், நடுக்கமில்லாதோன், சலனமில்லாதோன், ஒருபடித்தாயிருப்போன், அநாதியே மலத்தி னீங்கினோன், தோடமில்லாதோன், ஒருவ ரேவலுந் தான்பிறர்க் கேவல்செய்தலு மில்லாதோன், பெத்தமு முத்தியு மில்லாதோன், சிந்தனையில்லாமையாற் சுகதுக்க மில்லாதோன், புத்தீந்திரியங்களின்றியே சர்வபதார்த்தங்களையு மறியுஞ் சுத்தமுடையோன், வினைநுகர் காலத் தோராது தீயோரென்று நிக்கிரகித்தலும் நல்லோரென்று அநுக்கிரகித்தலு மில்லாதோன், தானே பரவத்துவா யுள்ளோன், துரியாவத்தைக்கு மப்பாலாயிருக்குந் தூயோன், அனந்தகோடி யண்டங்களெல்லாந் தன்பெருமைக்கு அணுவாகவும் தன்னுண்மைக்குப் பரமாணுக்க ளண்டமாகவும் அவற்றுடனின்று செலுத்திய அளவிறந்த கீர்த்தியையுடையோன்,

உரைதரு—படித்தே (எ-து) புகழப்பட்ட சாத்திரமாகிய கடலின் கரையையடைதற்குச் சொல்லுகிற பிரத்தியட்ச முதலாகவுள்ள சட்பிரமாணமாகிய மரக்கலங்களுக்கும் அளவுபடாமற் றூரமாக வகன்றிருப்போன் பரமசிவனென்று விசாரஞானமிக்கோர் மனமார அநுதியிட்டனர் (எ-று),

ஞானாமிர்தம்.

நாரமே யநல் லுயிரனைத்து
நாரமன் றேநா ரமின் றிலவே
நாரஞ் செய்திய மன்றே நார
மாருயிர்க் கலைவ தியற்கை யன்றே
பெருப கார மின்றே யாயினு
மாருயிர்க் குபய மனைமற் றுள்ளா
தாருயிர்க் குபய மறனும பேரிசை
வான்மண் ணீர் வளிபக நிறைதந்
தானுந் தப்புறம படாந்தும தானவை
யுறைவிட னாங்கினி தளித்து மிடையிற்

தின் காரியமுமல்ல சலந்தான் நிறைந்த பிராணிகளுக்கு இரக்ஷையாமல்லது பிராணிகடாம் சலத்திற்குச் செய்யும்பெரிய உபகாரமுமில்லையாயினும் நிறைந்த பிராணிகளை யிரக்ஷியாநின்றேன் நானென்று இச்சலந்தானினையா திருந்தும் இந்த நிறைந்தபிராணிகளுக்கு இரக்ஷையாயிருக்கும்,

மற்றும்—ஒன்றுவாறும் (எ-து) பெரிய கீர்த்தியையுடைய ஆகாயமானது பிருதிவி யப்புத் தேயு வாயுவாகிய நான்கினும் வியாபித்தும் அமையாது அப்பாலுமுடைத்தாய்த் தான் அந்தப் பூதங்களுக்கு மிகவுமினிதாக இருக்கத்தக்க விடங்கொடுத்தும் நடுவுந்தானும் அப்பூதங்களை யுருத்தெரித்துத் தான்வேறுபாடற ஒருபடித்தாகக்கூடித் தன்னை யின்றியமையாத அழகையுடைத்தாய் ஒருநாளும் தானவற்றோடு கூடியிராது,

பதங்கன்—நீணிலத்தோர்க்கே (எ-து) ஆதித்தன் றன்னுடைய கிரணங்கள் பலவற்றையும் விரித்துக்கொண்டு ஆகாயத்திலே யினிதாக இயங்கும்பொழுது எழுந்திருந்து நன்காகத் தொழில்புரியும் நிலைபெற்ற வான்மாக்களினொருடக்கு ஆதித்தனுக்கின்று அந்த ஆதித்தனுந் தான்பெறுதற்கரிய விலையையுடைத்தாகிய சயனத்தினின்று மெழுந்திருந்து பலதொழில்களைச் செய்யுங்களென்று ஏவு முறைமையைச் செய்யானாயினும இச்செயலுக்குக் காரணமாகப் பொருந்திய ஆதித்தனிடத்தல்லது செயற்கரிய தொழில்களைச செய்யுமுறைமை மிக்க விப்பூமியிலுள்ளார்க் கில்லை,

இன்னுங் கேண்மதி (எ-து) இன்னமுங் கேட்பாயாக,

இனமலர்—இலமே (எ-து) செறிந்ததாதோடே கொத்துக்கொத்தான பூக்களையுடைய அழகிய விருக்கத்தினிழல் விருக்கந்தானன்று காதலிக்கப்பட்ட பெடையும் வண்டும் சத்திக்கும் அழகிய நிழல் விருக்கத்தாற் படைக்கப்பட்டது மன்றேயாயினும் விருக்கமில்லையாயின் நிழல்காண்பது மில்லை,

ஒன்றோ—பெரிதே (எ-து) இன்னமுந் திட்டாந்தம் ஒன்றேயோ மற்றும் பலவுள,

கருந்தாது—பொருந்தாது (எ-து) இருப்புத்தாளைச் சுழற்றும் பெரிய காந்தக்கல் இரும்பை வருந்திச் சுழற்றவேண்டுமென்னுங் கருத்தில்லையாயினும் ஐயமறப் பெரிய விரும்பு சுழலுதற்கு இதனிடத்தல்லது பொருந்தாது,

என்ன (எ-து) இவ்வைந்து திட்டாந்தமும் போல,

விரிந்தொளி—விரவியோனே (எ-து) சர்வவியாபியாய்ச் சுயம்பிரகாசமுடையனாகித் திக்குகள் பத்தினும் உலகம் பதினைங்கினும் அளவுசெய்தளத்தற்கரிய வண்டங்களினும் வருகாலஞ் செல்கால நிகழ்காலமென்று சுழன்றுவருங் காலங்களினுஞ் சருவான்மாக்களும் போகம் புசித்தற்குத் தானின்றியமையாத வுரிய பொருளாய் நின்று இவற்றிளொன்றினுந் தான் பற்றற்று இத்தன்மையாகிய வுயிர்களை இரக்ஷித்தற்குத் தான்

எல்லாந்த னுள்ள தாகித் தானெல்லாத் துள்ளு மாகிச்
சொல்லாத பொருளு மாகித் தொல்லையா யெல்லை யின்றி
யல்லாதோர் வடிவொன் றின்றி யானந்த வடிவே யாகிக்
கல்லாத காட்சி யாகிக் கலந்துதா னின்ற தன்றே. 5

அன்றியொன் றிலாமை யாலே யகிலமுந் தானே யாகு
மென்றுதா னியம்ப லாகி யீறிலா வின்ப மாகி
யொன்றுடன் பற்று மின்றி யொழிவற நிறைந்து மேலாய்
நின்றது பரம தென்றே நிகழ்த்தின மறைக ளன்றே. 6

பெண்ணலி யாணொன் றில்லான் பெந்தமு முத்தி யில்லான்
வண்ணமும் வடிவொன் றில்லான் வரவொடு போக்கு மில்லான்
றிண்ணிய பொருளாய் மேலாய்ச் சேமமா யரிதாய்க் காண
வெண்ணிலா வாறாய்த் தூய்தா யிருப்பது சிவம தன்றே. 7

பொறிகள்போய்ப் புறக்க ணெங்கும் புலன்கண்மேற் பொரு
ந்து கின்ற, வறிவற நோக்கிக் கொண்டே யகமுக மாயி னோர்க்குப்,
பொறிபுலன் கரண மெல்லாம் புறம்புற மொழிந்து மேலாய்ச்,
செறிவுறு மின்ப வெள்ளஞ் சிவமெனப் படும தன்றே. 8

பரமார்த்ததரிசனம்.

ஆதி யந்த மில்தழி யாது நின்ற பெருமைய
தோதி னுண்ட திலையெனு மூன மின்றி யொளிர்வது
நீதி யின்க ணகிலமு மாகி யெங்கு நிறைதலி
னோதை நுங்கை தலைசெவி கால்க ளெங்கு முடையது. 9

காணும் புலன்க ளனைத்தி னிற்குங் கண்ணாய்நின்று காட்டுவது
பேணும் புலன்க டனக்கொன்று மில்லா தியன்ற பெற்றியது
பூணும் பற்றுத் தனக்கின்றி யெல்லாந் தானே பொறுப்பதது
மாணுங் குணங்க ளின்றியவை மன்னி யனுப விப்பதது. 10

பூத மைந்தி னகத்தி னோடு புறத்தி லும்பொலி கின்றதிங்
கேத மின்றி நடப்ப நிற்பன வாயி ருப்பத தின்னதென்
றோத ரும்படி நுண்ணி தாகிய தொன்ற தாகி யிருந்துமெய்ப்
பேதம் வந்தது போல நின்று பிறங்க வும்படு கின்றதே. 11

அருவ மாயதி தூர மாய தணித்து மாய தனைத்துமா
யுருவம் யாவு மளித்து மீள வொழிக்கு நாளி லொழிப்பது
பொருவி லாவொளி கட்கு முள்ளொளி யாகி யேபொலி கின்றதிவ்
விருமை விடிய ஞான மோடதன் ஞேய மாகி யிசைந்தது. 12

சிவப்பிரகாசதரிசனம்.

* யாதொன் றின்றிக் கண்காணு செவிதான் கேளா மனமறியா
தியாதொன் றின்றிச் சுவைநாவு மறியா கந்த மூக்கறியா
தியாதொன் றுண்டா வவையவைதா னறியு மதுவே சிவமென்றிட்
டோது மறையி னுகமங்க ளொப்பி லுண்மைப் பொருளிதுவே.

பரவிலக்கணம் முற்றிற்று.

ஆகச்செய்யுள் 1367.



## 4. சீவபரவேறின்மை.



சமாதி.

சீவனும் பரனும் வேறே யென்றியேந் தெரியக் கேணீ
சீவனற் பரத்தின் வேறேற் றெரிந்துகா ரியமதாகு
மேவிய காரி யந்தா னசித்தாகி விளியு மென்போற்
பாவிய கடம்போ லாகி நாசமும் பயமு முண்டாம். 1

சொரூபானந்தசித்தி.

* தற்பர னுருவஞ் சித்தே தற்பர னிடையேயக்
கற்பித சீவன் றானும தானக் காலந்தச்
சிற்பொரு ளொன்றே வேறெனின் மற்றது சித்தாமோ
வற்பமும் வேறு காது சிதாகா ரத்தாலே. 2

* பன்னு சடாகா ரப்புணர் வாலே பரசீவர்
பின்ன ரெனிற்போ தத்தொரு பேதம் பிறவாதே
மன்னு சடத்தே பேதம தத்தான் மானத்தாற்
சொன்ன வபேதப் பொருள்கலர் கண்ணிற் றேன்றுதே. 3

* பாவபுண் ணியங்க ளிரண்டையு முதறிப் † பற்றுவி டொன்றொடு மின்றி, யாவையுந் தானாய் வேறிலா தவனாய்ப் பெய்துமற் றிப்பொரு ளறிந்தான், சீவனும் பரனுஞ் சின்மய மாகு மாதலா லொப்பெனச் செப்பன், மேவி யொன்றாகி விடுதலை யன்றி வேறுவே றாகுமோ வீடு. 4

† பற்றுத லொன்றொடு என்றும் பாடமுண்டு.

* உடம்புடன் புணர்ப்பாற் சீவனுக் கிறையோ டொப்புள தென்னினொப் பில்லைக், கடந்திகழ் வானின் வானம்வே றாகக் கருதியொப் புரைப்பரோ வொப்பா, யிடுந்திறங் கன்மத் தாலெனிற் கன்ம மிறக்குமே விச்சையா லென்னிற், றிடம்பட முன்பே யுள்ளதே ஞான நிகழ்ந்துவ தில்லது நிகழ்த்தா. 5

* எப்படி யாலும் பண்டுமிப் பொழுது மெப்பொழு துஞ்சிவ சீவர்க், கொப்புள தாகு முருவமொன் றென வுண்மையால் வேறுறு தொன்றே, யப்படி யுள்ள சிவன் பிறர் போல வவிச்சையா னிகழு மவ் வவிச்சை, மெய்ப்பர விச்சை யானசித் தொன்றாய் விடுதலொப் படைதல்வே றன்றே. 6

சமாதி.

இயபரந் தன்னிற் பேத மிசைந்திடா தெங்ஙனென்னிற்
செப்பரு மாயை யாலே திகைத்திடல் பேத மாகு
மப்பொரு டானே யென்று மாவிலத் துவித மாகு
மொப்பரு முலகப் பந்த மில்லையென் றுணர வேண்டும். 7

ஆதலா லாகா யத்திற் கடாகாயம் வேறா றாற்போற்
பேதமி லான்மா சிவன் பரனெனப் பிராந்தி யாலே
யோதிட நின்ற தன்றி யுணர்விடைப் பேத மின்றா
நீதியி னின்ற சீவ னிலைமைய திவனா மன்றே. 8

ரோருபானந்தசித்தி.

* இந்தப் புரங்க ளொருமூன்று மிவன்ற னிடையே யிறப்பதுநித்
தொந்தப் புருட னொருகாலு நசியா னாதலாற்சொல்லு
மந்தப் பரம னேயிவன்றா னறியா மையினா லப்பரனைப்
பந்தப் படுமோர் சிவனெனப் பார்ப்பார் பவத்தே பதைக்கின்றார்.

* பேரறிவா யெவர்க்கு முள்ளதா யுயிராய் நிறைந்துள பிரம † சக்கரத்தாக்கை, திரிதரா நிற்குஞ் சீவனிப பரிசே திரிதரு மிவனையுந் திரிக்கும், பரமனு முள்ள வவனையு மனனம் பண்ணியிப படியிலே பார்ப்பார், றொருவனே சனன மரணமற் றொன்று முள்ளதாய் நிகழ்ந்திட வறியான். 10

† கோசத்தே என்றும் பாடமுண்டு.

* அறிவனு மறியா தானு மாய்நிகழ் பரசி வர்க்கு
மறையினுள் வடிவாற் றக்க வழியினு லனுப வத்தாற்
பிரிவிலே மாயை போக வேதுவாம் பிரமந் தானிங்
கறைதரு மெல்லாந் தானு மகர்ந்துரு வாகி நிற்கும். 11

* நாச முற்றுவிடு மாயை சீவனசி யானி ரண்டினு நாதனு, மீச னிற்கு நிறை யைந்தி யானமா ணுக வந்தவியல் பானுமே, யோச கத்தினிலே யானு மேகமெனு முண்மை யானுமுயிர் † முடிவிலாத், தேசினிற் றிகழு மிங்ஙனே பிரிது மெய்த மாயைசிதை வாகுமால். 12

† முடிவினிற், றேசனத்திகழு என்றும் பாடமுண்டு.

மெய்ம்மொழி

பசுபதி சைத னத்தாற் பகர்ந்திடு மெய்ப்பு மாகா
பசுவவன் பெத்த முத்தம் பதியவ னமல மொன்றும்
பசுவவன் பாச நீக்கை பதிதொழி லாகுந் தித்தாற்
பசுபதி பேதஞ் சொல்லிற பரவைசேர் நதிக ளன்றே. 13

சீவபரவேறின்மை முற்றிற்று.

ஆக செய்யுள் 1380.



# 12. மாயாட்பவணா.



## 1. மாயாநிருப்பியம்.



வினாவிளக்கம்.

உயிர்ப ரந்தமி னபேதமா முண்மையு முரைத்தவப் பரசிவர்
மயல்செ றிந்திடு மாயைபாற் பேதமாய் வந்தவா றதுதானு
நயம தோன்றிட வருளிய வகையென நாதனே யம்மாயை
யியல்பி னுண்மையுந் தெளிதர வேழைமேயற் கிசைத்தருள் செய
வேண்டும். 1

சிவப்பிரகாசதரிசனம்.

மாயை யென்பது தனதுகோ ளதுவலான் மதித்திடிற் பிறிதுண்டோ, வாய பொன்னின்வே றாகிய வணியென வானதே யம்மாயை, யோய்வ தின்றியே யொளிதரு பரமன தொளியினை மறைத்துண்டா, மாயை யென்பதொன் றிலையிலை யுளதெனி னஃதவன் வினோதங்காண். 2

சொரூபானந்தசித்தி.

* அடையவும் பிரமமே யெனவ றிந்துமோ
னடைவதங் கதனையே யாகு மன்றியே
யிடையினோர் மாயையுண் டென்ன வெண்ணுமேற்
கடையதே யாமவன் கற்ற கல்வியே. 3

* மாயையென் றொன்றுண் டாக மதிப்பது மனன மல்ல
வாயினு மகண்ட ஞான வங்கமா மந்த ஞானங்
காயம்வே றாகு மென்கை காரண மாக வித்தைத்
தூயநான் மறைக ளோதுந் துவந்துவந் தீர்க்கை சுட்டி. 4

* யாதொரு படியாற் றோன்று மியல்பினாற் சகத்திற் குண்மை
யோதிய துபநி டந்தா னொரோவிடத் துண்மை யாகப்
பேதமா முலகு தோன்றிற் பிறப்பதற் கேது வாகு
மீதெலா மில்லை யென்ன வின்பத்திற் கேது வாகும். 5

* ஆகை யாலகி லத்தையே மாயையென் ருகமெய் யாய்வந்த, மோக மாற்றுதற் பொருட்டொரோ விடத்திலே மொழிந்தது முதுவேதம், பாக மாகிய சித்தரைக் குறித்துமெய்ப் பரம்பொரு ளாகின்ற, வேசு மேநிகழ் கின்றதெல் லாமென வியம்பிய திதயத்தால். 6

போதாமிர்தம்.

ஏக மேயென தருந்தவப் பயனதா மின்பமே யெனதாவிப
பாக னேமறை பரமனே யுணர்வுறு தவர்களைக் குறித்தோது
மோக மாயையின் வடிவொடு வகையது முறவிருந் திடுமாறு
மேகு மாறது மின்பாற் பிரமமா மியல்பையு மிசையெந்தாய். 7

* மாயை யுண்மையாந் தனை † நினை யாததன் மறவியே பிறிதில்லை
யாய தன்வடி வறையினஞ் ஞானமா மளவிலா விருளாகு
மேய தன்வகை பூதபௌ திகமுதல் விளம்பிடு மெனவையுந்தா
னேய வேயது விருப்பதெத் திறமெனி னதனையு மிசைப்பன்கேள்.

† யுண ராததன் என்றும் பாடமுண்டு.

* அறிவின்மா யைதா னதிலிருந திடுமெனி னறிகிலே னெனலில்லை, யுறைவனுன் மாவி னென்றிடி னுணர்வுண ராமையும வியப்புண்டோ. செறியுமான் மாவி னென்றிடிற் றெளிந்தேன் றெளிநதில னெனலாகு, மறிவதாசிர யமும வி யமு மலதிலா மையினிறந் தறிவே பாம். 9

போதாத்ருகாம்.

* சோனன மாயைசத் தசத்துட னுபயந்துன் னிருபனதையா நிருவாச்சியை, யென்ன வைந்துசன் னிவிர்த்திய தசத்தசன் னிவிர்த்திசத் ததுவாகுஞ், சொன்ன வற்றினி னிவிர்த்திய துபயம்பொய்த் துன்னிரு பனதையேகிப், பின்ன தாமநிர் வாச்சியம பொய்வெறும் பிரமமா வதுநீர்வே. 10

* விரித்த மாயையின் மேவுமை வகையது மொன்றிலொன் றதுநூலங், கிரித்த பார்வையிற் றிகழ்பவை மிகமிக நுண்ணிதா மவைதம்மைக், கரத்தி னெல்லிபோற் கண்டனு பூதியிற் கழித்திடிற் கண்ணேபா, யிருக்க லாமல துரையினுற் கழியுமோ வெலையிலாப பெருமாயை. 11

சொரூபானந்தசித்தி.

* மெய்மை நாடின்மெய்ப் பரமலா லவிச்சையும் விச்சையும் வேறேயோ, வையமானது மற்றொரு பொருள்களு மில்லையிம் மன்னஞ்செய், தூய்ய யோகிமுன் னெப்படி யெப்படி தோன்று கின்றதுதோற்றஞ், செப்பு † மியாவையுஞ் சிவன்வடி வாகவே திகழ்ந்திடுந் திடமாக. 12

† மாயையுஞ் என்றும் பாடமுண்டு.

மாயாநிரூபியம் முற்றிற்று.

ஆகச்செய்யுள் 1392.



## 2. பிரபஞ்சநிரூபியம்.



விருவிளக்கம்.

மாயையின் வகையெலா மறைந்த வாறுபோன்
மேயப்பிர பஞ்சமாய் விளைந்த வாறது
மாயுமப் பரிசது மாய வுண்மையே
யாயநற் பரிசது மருள்செ யண்ணலே. 1

சொரூபானந்தசித்தி.

* சின்மாத் திரமா யுள்ளவெறுஞ் சிவனை திகழ்வா னியாதுக்கு
முன்மாத் திரமும் வேறில்லை முற்று மவனே மொழிவற்ற
நன்மாத் திரமா யான்மாவென் றுரைக்கு நாமத் திணையுடையான்
றன்மாத் திரமே யாகியவத் தன்மையான சங்கரன்றான். 2

தத்துவசித்தி.

சோதி யேவிளை யெனும்பெரிய தூவெளியிலே
யாதி பீசமய லாயுள தவிஞ்சை யதிலே
போது மாயையெனு மங்குர முயர்ந்து பணையைப்
பூத மாயின பொருந்துவதன் மீது பொதுவே. 3

நித்த மென்னநிகழ் கின்றபணை யைந்தி னெடுவா
னத்த டம்பணை நயந்தநெறி சிந்தை யதுவா
யத்தின் முன்வசனம் வாயொலிகள் கன்ன படைவே
யொத்து யர்ந்தவிவை யொன்றுகளை யொன்று நவியே. 4

ஆதலி ளுலினைங் கரண மாகமுன்
னோதிய நூலமா முடம்ப ழிந்துதன்
சாதன வுடம்பிலே சமைந்த தாதலாற்
றீதற விதுமிறும் வகையுந் தேர்துமால். 10

ஐயமாங் குறிமன மழியும் புத்தியிற்
செய்யுநிச் சயக்குறி சிறந்த வீதுபோய்
மெய்யகங் காரமாய் வியு மீதுதான்
மையறு துணிவுடன் மாய்ந்து சித்தமாம். 11

பணித்தளி யாமிது பயக்குஞ் சிந்தையாய்க்
கணிகலக் கணேயிது கரக்கு மாயையி
லணியுள திலதுமா மீத விஞ்சையி
னுணர்வது பெறுதவி துணர வில்லையாம். 12

காரண மதினெழுங் காரி யங்கடாஞ்
சேரும்வந் தந்நெறி தேய்ந்து தேய்ந்தபின்
பூரண மாகியே புறம்பு முள்ளுமோர்
வாரண மரிதென மலருஞ் சோதியே. 13

கதிரொளி பிறிதிலாக் கண்ணி னுள்ளொளி
யதிர்வெயி லிருளுறக் காணு மந்துபோ
லுதவிவந் தவிஞ்சையீ தோங்கு ஞானமே
யிதுபொரு ளிதுவசத் தென்று காணுமால். 14

சொன்னவிஞ் ஞானமே துடைத்த விஞ்ஞையை
யுன்னரு மொளியிலே யொன்று மொன்றவே
முன்னுல கெனுமொழி முடிந்து மெய்ப்பொரு
ளன்னிய மழிந்துபோ யகண்ட மாகுமால். 15

சிவப்பிரகாசதரிசனம்.

கேள்வியு மனனமு †முதலி யற்றினாற்
கூழிய ஞானமென் றிங்குச் சொன்னது
வாழ்தரு மனமதி னுய தல்லவோ
யாழ்ந்தமே வையமிங் கதனின் மாதவா. 16

† முதலி வற்றினுற் என்றும் பாடமுண்டு

தான்மன விஞ்ஞையாய்த் தழித்த பின்சகங்
கானல்போ லென்னினுங் காண நின்றதே
தானுறு மிரவிமுன் றமமு நின்றதோ
வானவா றழிதர வருள்செ யங்கணா. 17

மேதையின் மிகுதரு விமல மைந்தநீ
போதிய பரிசெலா மொன்னி தன்றனக்
கேதம தறவுல கென்ப தின்றிமெய்ப்
போதமே யாம்வணம் புகலக் கேட்டியால். 18

* அனலொழி தரவணி பொடித் தாக் கட்டு வந்
சொனவணி முறியெனத் தோன்று மாறுபோல்
மனனிலா விஞ்ஞையால் வைய மாறுமோ
வனலழி வெனவனு பவத்தின் மாறுமால். 19

* பன்னிய வனுபவம் பகரின் மாயையின்
றன்னிய லெவகை தம்மிற் றலாா
முன்னிய விகலின முதல தைவகை
மன்னவே † கண்டழிந் திடுதன் மாதவா 20

† கண்டழித் தென்றும் பாடமுண்டு.

* அகிலமெ முதல தாக வறைந்தமுப் பாவந் தானுந
தகுகரி யெனுமப் பாவஞ் சகலமுந் தானெனன் பாவ
மகமுற வைந்துங் கண்டங் கவைகழிந் திடவே யையந்
திகழ்தரு பேரு மின்றிச் சிற்பரம் பிரம மேயாம். 21

பிரபஞ்சநிருப்பியம் முற்றிற்று.

ஆகசெய்யுள் 1413.



# 13. ஞானப்பகுதி.

## 1. ஞானப்பிராதான்யம்.

### போதாமிர்தம்.

இப்படி பேத மில்லாப் பொருளதா மிறைவன் றன்னை
யெப்பொரு ளாகவு முள்ளத் திலங்கக் காண்ப தொன்னிற்
செப்பிடு ஞானத் தல்லாற் றிகழ்ந்திடா தென்று மென்ப
தொப்பமை யில்லா நல்லோர் பாவரு மறைப்பா கேளாய். 1

* பிரமனை முதலாத் தம்பமீ றாகப் பொருந்திய பொருள்கள்
யாவையினுந், திரமதா யொத்துத் திகழுமெய்ப் பொருளைத் தேவ
ருந் தெரிக்குமா றறியார், வரமதா மந்தப் பொருளினை வருத்த
மின்றியே காணலா ஞானச், கருதருமவ் விழியா லன்றியே வேறன்
றுற் கற்பகோ டியினுங்காண் பரிதால். 2

### மூலசித்தி.

அங்கியிற் பரனை மந்திர மதனாற் கண்டதாக் கொள்வரந்
தணாகள், பங்கயில் யோகப் பார்வையா லுடலிற் பாவனை செய்வர்
யோகிகடா, மங்கறி விலாத வவரெலா முண்மை யாகவே யது
மையிற் காண்ப, ரெங்குமாய் நின்ற பரனையப் படியே யிலங்கிடக்
காண்பர் ஞானத்தால். 3

### ஞானசித்தி.

* வாக்கினுன் மனத்தான் மதிக்கொணாப் பொருளை மதிநு
ணுப் புக்களால் வருந்தி, நோக்குமா முயல்வா முயலுகின் முலன்
னோக்கிட லாகுமா றுண்டோ, தாக்கிலா தெங்கு மியாவையுந்
தானுய்த் தானவை யொன்றலாப் பொருளை, நீக்கிலா ஞான விழி
யினு லங்கைக் கனியெனக் காணலா நேரே. 4

### திருக்கடைக்காப்பு.

ஊனத் திருணீங் கிடவேண்டின்
ஞானப் பொருள்கொண் டடிபேணுந்
தேனைத் தினியா ‡ னபருஞ்சேர்
வானம் மயிலா டுதுறையே 5

‡ னபர்சோலை, வானைத் தவர்பயி என்றும் பாடமுண்டு

தேவாரம்.

ஊனினு ளுயிரை வாட்டி யுணர்வினார்க் கெளிய ராகி
வானினுள் வான வர்க்கு மறியலா காத வஞ்சர்
நானெனிற் றானே யென்னு ஞானத்தார் பத்தர் நெஞ்சிற்
றேனுமின் னமுது மானார் திருச்செம்பொன் பள்ளி யாரே. 6

உடம்பெனு மனைய கத்து ளுள்ளமே தகளி யாக
மடம்படு முணர்நெய் † யட்டி யறிவெனுந் திரிம யக்கி
யிடம்படு ஞானத் தீயா லெரிகொள விருந்து நோக்கிற்
கடம்பமர் காளை தாதை கழலிணை காண லாமே. 7

† யூட்டி யுயிரெனுங் என்றும் பாடமுண்டு.

ஞானத் தாற்றொழு வார்சில ஞானிகள்
ஞானத் தாற்றொழு வேனுனை நானலேன்
ஞானத் தாற்றொழு வார்க டொழக்கண்டு
ஞானத் தாயுனை நானுந் தொழுவனே. 8

திருவாய்மொழி.

நாகத் தணையானை நாடோறு ஞானத்தா
லாகத் தணைப்பார்க் கருள்செய்யு மம்மானை
மாகத் திளமதியஞ் சேருஞ் சடையானைப்
பாகத்து வைத்தான்றன் பாதம் பணிந்தேனே. 9

சக்க ரத்தண் ணலே யென்று தாழ்ந்துகண் ணீர்ததும்பப்
பக்க நோக்கி நின்ற லந்தேன் பாவியேன் காண்கின்றிலேன்
மிக்க ஞான மூர்த்தி யாய வேதவி ளக்கினையென்
றக்க ஞானக் கண்க ளாலே கண்டு தழுவுவனே. 10

ஞானப்பிராதான்யம் முற்றிற்று.

ஆகச்செய்யுள் 1423.



## 2. ஞானவிலக்கணம்.



வினாவிளக்கம்.

கருதரு மீசன் றன்னைக் காண்டருங் கண்ண தென்றே
யுரைதரு ஞானந் தன்னின் பிரதானமன் றுரைத்தாற் போலப்
பொருவரு ஞான மென்னும் பொருளது விலக்க ணத்தை
விரிதர வடியனேற்கு விளம்பியே யருள வேண்டும். 1

### சமயாசாரம்.

அறிவென்ப தியாதோ வென்னி னறிகின்றோன் றனையுந் தன்கட்
பிறவியும் பிறப்புஞ் சாவும் பிறப்பறு நிலையும் பேணு
நெறியினாற் பாசம் வீடும் வீட்டினி னிலையு மெய்ம்மை
யறிவதா மறிவிவ் வாறு மறியாமை யதுவா மென்றான். 2

தனதறி வறிவி லாமை † தானறி வெங்ங னென்றா
னனவையுங் கனவை யுந்தா னனவிலோ றாதல்போன் ஞானங்
கனவுதா னனவு மற்றக் கனவையுங் காணா தாற்போன்
மனமறி வறிவி லாமை மதியாமை மயக்க மென்றான். 3

† தானன்றி யெங்ஙன என்றும் பாடமுண்டு.

### பரமார்த்ததரிசனம்.

மன்னவுட லியாவையினு மன்னியறி வாய்நின்
றன்னுமுயிர் யானிவை யிரண்டினையு மோர்காற்
றன்மையினி னியாதறியு மற்றதனை ஞான
மென்னவுணர் வாயிஃ தெனக்குமிசை வாமால். 4

### சொரூபானந்தசித்தி.

* ஈசன்சக மோடுள சிவனதா மியாவும்பர ரூபம தென்று கொடே, நேசம்மத னுள தாகியதன் னிறையும்மறி வானதி யாததுதான், மாசொன்ற திலாத பரம்பொருளும் மயலொன்றறி யாத வபேதமது, மேதம்மொழி வேதன மாவதுவு மென்றம்மல ரோனு மியம்பினனால். 5

* இத்தன்மை யொழிந்துள தாமறிவே றியாதொன்றறி யாமையை யெய்தியதே, மெய்த்தன்மை யதாயறி போதகினும் வேறாயறி கின்ற விடந்தனிலு, மத்தன்மையில் வேறு படாத திலோ ரையம்மிலை யாசற நின்றதுதான், சித்தொன்றி யறிந்திடு மவ்வறிவே சேர்தற்கரி தாயிடு மெங்கணுமே. 6

* சேகரூப மாய வதின்வே றிலாது விளையாடு தெய்வ மதுதான்
சகரூப மாய தனையே பகுத்து விளையாடி யுண்ட லஃதனை
யகமாயை யின்றி யறிகின்ற போத முளதாகி நிற்கு மதுவே
தகனாரு மோது மறிவாவ தென்று சதுரான னன்சொ றருமால்.

*சிவனை யுள்ளான் பிறிதில்லை யென்று திரமா யறிவதுவே
பவமே யொழிக்கும் பரமார்த்தம் பகரு நெறிதா னதுவாகு
மவமே யிதனை யொழிந்துளதா மவைதா மிதனை யடைதற்குத்
தவமே முதலாஞ் சரியைகளைச் சாற்று கின்ற தன்மையவே. 8

சிவப்பிரகாசம்.

* அவ்வண்ண முரைத்த ஞான மமலமாய் நண்ணி தாகி
மெய்வண்ண விகார மின்றி வேறொன்றோ டணைத லின்றி
மைவண்ண விருத்தி யின்றி வளரொளி யாயே நிற்கு
மிவ்வண்ண மல்லா தெல்லா மிருளுடை யறிவா மன்றே. 9

சிவஞானச்சிறப்பு

உளத்தொளிர் ஞானந் தோன்று முபாயமு மியாதோ வென்றால்
விளக்கொளி விரிப்ப † வீய விருட்பொருள் விளங்கு மங்க
முளத்திரி நெய்யு நான்கு மொருகாலத் துளவா றற்போற்
றுளக்கிலா ஞானந் தோன்றிற் றென்றுநாற் குணமுண் டென்றான்.

† வீயு மிருட்பொருள் என்றும் பாடமுண்டு.

ஞானவிலக்கணம் முற்றிற்று.

ஆகச்செய்யுள் 1433.

## 3. ஞானமான்மியம்.

வினாவிளக்கம்.

ஏற்றிய ஞானந் தன்னி னிலக்கண மிசைத்தாற் போல
வாற்றவே சரியை யாதி களுக்குவரப் பயனு மற்றைச்
சாற்றிய ஞானந் தன்னின் றலைமையும் பெருமை தானு
மாற்றறி யேனை யாண்ட வள்ள லே யருள வேண்டும். 1

சுப்பிரபோதம்.

* சரியையுங் கிரியை யோகஞ் சாற்றிய ஞான மென்ன
விரிதரு பாத நான்கும் விளம்பிய முறைமை கேளா
யுரைதரு மூன்று ஞான முதித்திடற் கேது வென்றும்
† புரையறு ஞானத் தாலே பொருந்தும்வீ டென்றுங் காணே. 2

† புரையற என்றும் பாடமுண்டு.

ஒன்றினுக் கொன்று மேலா மோங்குஞா னத்தால் வீடு
மன்றிமற் றுள்ள மூன்று பாசைவிட் டன்பாற் செய்யி
னின்றஞா னந்தான் வந்து நேர்படற் கேது வாகு
மன்னெனி னவற்றி னாய பயன்களு மறையக் கேளாய். 3

